# தங்கத் தமிழ் வினாவிடை

(பத்தாம் வகுப்புக்குரியது)

(ஆ)





"தங்கத் தமிழ் வினாவிடையைத் தவறாமல் கற்றிடுவோர்
மங்காத மதிப்பெண்ணை மனமகிழப் பெற்றிடுவர்"






ஆசிரியர் :

**புலவர் அ. இராமலிங்கம்**

முதனிலைத் தமிழாசிரியர்

மாநகராட்சி ஆண்கள் உயர்நிலைப்பள்ளி

நுங்கம்பாக்கம், சென்னை-34

# தங்கத் தமிழ் வினாவிடை

(பத்தாம் வகுப்புக்குரியது)

(ஆ)





ஆசிரியர் :

**புலவர் அ. இராமலிங்கம்**

முதனிலைத் தமிழாசிரியர்

மாநகராட்சி ஆண்கள் உயர்நிலைப்பள்ளி

நுங்கம்பாக்கம், சென்னை-34



**நக்கீரன் பதிப்பகம்**

15-A, பெருமாள் கோயில் தெரு,

வடபழநி, சென்னை-26.

[விலை ரூ. 1-30

## பரிந்துரை ...

மாணுக்கர் செவிவாயாக நெஞ்சுகளனுக ஆசானுரைத்தது அமைவுறக்கொளினும் காற்பங்கே ஏற்க இயலும். இயன்றதைக் கொண்டு ஏற்றதைத் தம் வயப்படுத்தித் தேர்வுக்குத் தங்களை ஆயத்தஞ் செய்து கொள்ளத்தக்க முறையில் புலவர் திரு. அ. இராமலிங்கனுர் தெள்ளிய—இனிய—எளிய நடையில் நூற்குறிப்பு, ஆசிரியர் குறிப்பு, இலக்கணக் குறிப்பு ஆகிய இவை உள்ளிட்ட வினுவிடைகள் ஆக்கியுள்ளார். இவை, மாணவர் சமுதாயத்துக்குப் பெரிதும் பயன்படுமென யான் நம்புகிறேன். 'தங்கத் தமிழ் வினுவிடை' நூல் மாணுக்கருக்கு உறு துணையாக இருக்குமென்பதில் எள்ளளவும் ஐயமில்லை.




இங்ஙனம் :

**ஞா. கு. துரைவேலன்,**
தலைமை ஆசிரியர்,
மாநகராட்சி ஆண்கள் உயர்நிலைப்பள்ளி,
நுங்கம்பாக்கம், சென்னை-34.

## பதிப்புரை ...

மாணவர் உலகிற்குத் தொண்டு செய்யும் நோக்கத்தோடு செய்யுள், உரைநடைப் பகுதிகட்கான வினவிடைகளையும், நூல் ஆசிரியர் குறிப்புகளையும் இன்றியமையாத இலக்கணக் குறிப்புகளையும் தாங்கி இந்நூல் வெளிவருகிறது.

இந்நூலாசிரியர் புலவர் அ. இராமலிங்கம் அவர்களால் எழுதப்பெற்ற "தங்கத் தமிழ்த் துணைவன்" என்ற நூல் இதுவரை இருபத்து ஐயாயிரம் படிகள் விற்பனையாகியுள்ளன என்றால் இந்நூலாசிரியரது திறமைக்கும், மாணவருலகிலும்–ஆசிரியருலகிலும் அவரது நூலுக்குக் கிடைக்கும் வரவேற்பிற்கும் வேறு சான்று வேண்டுமோ?

மிகுதியான வருவாயை எதிர்நோக்காது, குறைந்த விலையில் மாணவர்கட்குத் தேவையானவற்றை மட்டுமே இந்நூல் தாங்கிவருகிறது. மாணவருலகமும், ஆசிரியருலகமும் இந்நூலுக்கு வரவேற்பளித்து எமது முயற்சியை ஆதரிக்குமாறு வேண்டுகிறோம்.

இந்நூலைச் சிறப்புற எழுதியுதவிய ஆசிரியர்க்கும், விரைவில் அச்சிட்டுதவிய மத்திய கூட்டுறவு அச்சகத்தார்க்கும், சிறப்பாகச் செயலாளர் திரு. க. விநாயகமூர்த்தி அவர்கட்கும், பரிந்துரை வழங்கிய தலைமை ஆசிரியர் அவர்கட்கும் எமது இதயங்கனிந்த நன்றி உரித்தாகுக.

**நக்கீரன் பதிப்பகத்தார்.**

# உள்ளுரை

# செய்யுட் பகுதி

## I. வாழ்த்து

### (அ) கடவுள் வாழ்த்து

### தாயுமானவர் பாடல்

**1. தாயுமானவரைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.**

தாயுமானவர் திருமறைக்காடு என்னும் ஊரில் தோன்றியவர். தந்தையார் கேடிலியப்பப் பிள்ளை. இவர் விசயரகுநாத சொக்கலிங்க நாயக்கர் என்னும் மன்னரிடம் கணக்கராகப் பணியாற்றியவர். இவரது காலம் கி.பி. 18–ஆம் நூற்றாண்டு.

**2. இறைவனின் பெருமைகளாகத் தாயுமானவர் கூறுவன யாவை?**

அருள் உருவாய்ப் பழுத்த பழத்தினது சுவை என்றும், கரும்பின் சாறு என்றும், தேன் என்றும், அரிய அமுதம் என்றும், தன் கண் போன்றவன் என்றும், கிடைத்தற்கரிய பொருள்கள் அனைத்தையும் கொடுப்பவன் என்றும், கருணை நிறைந்த முழுமையாய் நிலை பெற்ற ஒப்பற்ற பொருள் என்றும், தூய்மையான வாழ்வு என்றும், நினைத்தற்கரிய நினைப்பின் உட்பொருளாய்ப் பொருந்தி, காலத்தையும் பெருக்கங்களையும் படைத்து, உயிர்க்கூட்டங்களை இயக்குகின்ற மேலான பொருள் என்றும் இறைவனின் பெருமைகளைத் தாயுமானவர் கூறுகின்றார்.

**இலக்கணக் குறிப்பு :**

**நீங்காப் பூரணமாய்:**—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

## (ஆ) மொழி வாழ்த்து

### 1. பாரதிதாசனர் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

இவரது இயற் பெயர் கனக சுப்புரத்தினம் என்பது. பாரதிதாசன் என்பது இவர்தம் புனைப் பெயர். இவர் 1891–ஆம் ஆண்டு புதுச்சேரியில் கனகசபை முதலி யாருக்கு மைந்தராய்த் தோன்றினர். அழகின் சிரிப்பு, இசையமுது, பாண்டியன் பரிசு, குடும்ப விளக்கு போன்ற நூல்கள் இவரால் இயற்றப்பட்டவை. இவர் 1966–ஆம் ஆண்டு இயற்கை எய்தினர்.

### 2. தமிழன்னையின் சிறப்புகளாகப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனர் கூறுவன யாவை?

மக்களது வாழ்வில் சிறப்புகளைச் செய்பவள் என்றும், பெருமைகளின் உறைவிடம் என்றும், தாய் என்றும், தாழ்கின்ற மக்களைத் தாழாமல் தடுப்பவள் என்றும், வீரர்களின் வீரமாகவும், அவர்தம் வெற்றி களாகவும் திகழ்பவள் என்றும், முற்காலத்தில் அறிவில் லாது திரிந்த மக்களாகிய வெள்ளத்தின்மீது பூத்துச் செழித்த செந்தாமரைக் காடு என்றும், ஒளி என்றும், தமிழன்னையைப் பாரதிதாசனர் சிறப்பிக்கின்றனர்.

**இலக்கணக் குறிப்பு :**

வீழ்வார்—வினையாலணையும் பெயர்.

மனிதராம் புதுப்புனல்—உருவகம்.

புதுப்புனல் (புதுமை+புனல்)—பண்புத்தொகை.

செந்தாமரை (செம்மை+தாமரை)—பண்புத்தொகை.

வாழி—வியங்கோள் வினைமுற்று.

## (இ) நாட்டு வாழ்த்து

### 1. ஆசிரியர் குறிப்பு வரைக.

இதன் ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார். ஊர்—எட்டையபுரம். பெற்றோர் சின்னசாமி ஐயர், இலக்குமி அம்மையார். காலம் 1882—1921. நாட்டு விடுதலைக்காக மக்கள் எழுச்சி கொள்ளும் வண்ணம் பல இனிய-எளிய-உணர்ச்சி ததும்பும் கவிதைகளைப் புனைந்து அதன் வழி தேசியக் கவிஞர் என்ற சிறப்பினைப் பெற்றவர். தனிப் பாடல்கள் தவிர, இவர் இயற்றிய பிற நூல்களாவன: கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் என்பன.

### 2. தாய்நாட்டின் பெருமைகளாகப் பாரதியார் கூறுவன யாவை?

செல்வம் நிறைந்தது என்றும், ஈடிணையற்ற தென்றும், குற்றமற்ற தென்றும், நீர்வளம் நிறைந்த தென்றும், நஞ்செய் நிலங்களின் வாயிலாகப் பெரும் பயன் பயப்பது என்றும், வளத்தினால் பசுமை நிறம் பெற்றது என்றும், நிறைந்த இன்பம் பெற்றது என்றும், மக்கள் மகிழ்வோடு வாழக் காரணமாயிருப்ப தென்றும், பல வகையான இயற்கை அணிகலன்களைப் பெற்றது என்றும், தன்னுடைய பெரிய நிலப்பரப்பில் விரும்பி மக்களது உயிரைத் தாங்கி நிற்பது என்றும், தாய் போன்றது என்றும், தமிழ்நாட்டின் பெருமைகளைப் பாரதியார் கூறுகின்றார்.

**இலக்கணக் குறிப்பு:**

நிறைந்தனை, தீர்ந்தனை, சார்ந்தனை, ஒன்றிலை, வாய்ந்தனை—முன்னிலை ஒருமை வினைமுற்றுகள்.

பைந்நிறம் (பசுமை + நிறம்)—பண்புத்தொகை.

குறுநகை (குறுமை + நகை)—பண்புத்தொகை.

இருநிலம்—உரிச் சொற்றொடர்.

மருவு செய்—வினைத்தொகை

நற்பயன் (நன்மை+பயன்)—பண்புத் தொகை

இறைஞ்சுவாம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று.

# II. அறவுரை

## (அ) திருக்குறள்

### 1. திருக்குறள்—நூற்குறிப்பும், ஆசிரியர் குறிப்பும் தருக.

நூற்குறிப்பு: திரு+குறள்—திருக்குறள். மேன்மை பொருந்திய குறள் வெண்பாக்களால் ஆகிய நூல் என்பது பொருள். திரு என்பது அடைமொழி. குறள் என்பது இரண்டடி வெண்பாவைக் குறிக்கும். அறநூல்களுள் தலைசிறந்தது திருக்குறள். பதினெண்கீழ்க்கணக்கு நூல் களுள் ஒன்று.

ஆசிரியர் குறிப்பு: ஆசிரியர்-திருவள்ளுவர்; ஊர்-மயிலை எனவும் மதுரை எனவும் கூறுவர்; பெற்றோர் ஆதிபகவன்; மனைவி வாசுகி அம்மையார்; காலம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது என்பர்.

### 2. பிறவிப் பெருங்கடல் நீந்துவார் யாவர்?

இறைவனுடைய திருவடிகளை இடைவிடாது நினைக் கின்றவர்களால்தான் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும்.

### 3. மழையினது சிறப்பை ஆசிரியர் எங்ஙனம் எடுத்துக் கூறியுள்ளார்?

'பூமியின் கண் வாழ்வாரை, பெய்யாது நின்றும் மிகுதியாகப் பெய்தும் கெடுப்பதும், அவ்வாறு கெட்டவர் களுக்குத் துணையாய்ப் பெய்து அவர்களை வாழ்விப்பதும் ஆகிய எல்லா ஆற்றல்களையும் பெற்றது மழை' என்று மழையினது சிறப்பை ஆசிரியர் கூறியுள்ளார்.

**4. அறன் வலியுறுத்தல் பற்றிய திருவள்ளுவர் கருத்துகளைத் தொகுத்து எழுதுக.**

அறன் வலியுறுத்தல் பற்றிய திருவள்ளுவர் கருத்துகள் :—மனத்தில் குற்றமில்லாதிருப்பதே எல்லா அறங்களும் ஆகும். மனத்தூய்மை இல்லாத மற்றவை ஆரவாரத் தன்மையை உடையவை.

'யாம் இப்போது இளைஞராக உள்ளோம்; பிற்காலத்தில் பார்த்துக் கொள்ளலாம்' என்று எண்ணுமல் அறம் செய்ய வேண்டும். அவ்வறமே உடல் அழியும் காலத்தில் உயிர்க்கு அழியாத் துணையாகும்.

**5. இல்வாழ்க்கை பற்றிய திருவள்ளுவர் கருத்துகளைத் தொகுத்து எழுதுக.**

ஒருவனது இல்வாழ்க்கை தன் துணைவிமேல் செய்யத் தகும் அன்பினையும், பிறர்க்குப் பகுத்து உண்டலாகிய அறத்தினையும் உடையதாக விளங்குமேயானால் அவை முறையே அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆகும்.

அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல்வாழ்க்கையே ஆகும்; மற்றைத் துறவறமோ பிறரால் பழிக்கப்படுவது இல்லையாயின் அவ்வில்லறத்தோடு ஒரு தன்மைத்தாக நன்று.

**6. அன்புடைமை பற்றிய திருவள்ளுவரது கருத்துகளைத் தொகுத்து எழுதுக.**

அன்புடைமை பற்றிய திருவள்ளுவரது கருத்துகள் :—

உடம்பின் அகத்து உறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு, உடம்பின் புறத்து உறுப்புக்கள் எல்லாம் என்ன உதவியைச் செய்யும்?

எலும்பு இல்லாத உடம்பை உடைய உயிர்களை வெயில் காய்ந்து வருத்துவது போல அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் வருத்துவான்.

**7. விருந்தோம்பல் பற்றிய திருவள்ளுவரது கருத்துகளைத் தொகுத்து எழுதுக.**

விருந்தினரை முன்னே போற்றி உணவளித்து, மிஞ்சிய உணவை உண்டு வாழ்கின்றவனுடைய நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமோ? வேண்டாம்.

வந்த விருந்தினரைப் போற்றி, இனிவரும் விருந்தினரை எதிர் பார்த்திருப்பவன் வானுலகத்திலுள்ள தேவர்களுக்கு நல்ல விருந்தினனுவான்.

**8. செய்ந்நன்றியறிதல் பற்றிய திருவள்ளுவரது கருத்துகளைத் தொகுத்து எழுதுக**

ஒருவன் தினையளவாகிய மிகச் சிறிய உதவியைச் செய்தபோதிலும் அதன் பயனை ஆராய்கின்றவர், அதனையே பனையளவாகிய மிகப் பெரிய உதவியாகக் கருதிப் போற்றுவர்.

முன் உதவி செய்தவர், பின்பு கொல்வதற்கொப்பான துன்பத்தைச் செய்தாராயினும், அவர் முன் செய்த ஒரு நன்மையை நினைக்க அந்தத் துன்பம் கெடும்.

**9. வாணிகம் எப்போது பெருகும்?**

பிறர் பொருளையும் தம் பொருள்போல் போற்றி நடுவு நிலையோடு வாணிகம் செய்தால் அவ்வாணிகம் பெருகும்.

**10. அடக்கமுடைமை பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை?**

ஒரு பிறப்பில், ஆமைபோல் ஐம்புலன்களையும் அடக்கியாள வல்லவனுனல் அஃது அவனுக்குப் பல பிறப்பிலும் காவலாக அமையும் சிறப்பு உடையது.

காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்காவிட்டாலும் நாவையாவது காக்க வேண்டும்; காக்கத் தவறினுல் சொல் குற்றத்தில் அகப்பட்டுத் துன்புறுவர்.

**11. ஒழுக்கமுடைமை பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை?**

ஒழுக்கம் உடையவராக வாழ்வதே உயர்ந்த குடிப் பிறப்பின் தன்மையாகும்; ஒழுக்கம் தவறுதல் இழிந்த குடிப் பிறப்பின் தன்மையாகி விடும்.

மன வலிமை உடைய சான்றோர், ஒழுக்கம் தவறுதலால் குற்றம் உண்டாவதை அறிந்து, அவ்வொழுக்கத்தில் தவருமல் காத்துக் கொள்வர்.

**12. அழுக்காருமை பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை?**

பொருமை என்று கூறப்படும் ஒப்பற்ற பாவி, ஒருவனுடைய செல்வத்தையும் கெடுத்துத் தீய வழியில் அவனைச் செலுத்திவிடும். பொருமை பொருந்திய நெஞ்சத்தானுடைய ஆக்கமும், பொருமை இல்லாத நல்லவனுடைய கேடும் இயல்பல்லாதனவாதலின் ஆராயத் தக்கவை.

**13. தீயினும் அஞ்சப்படுவது எது? ஏன்?**

தீயினும் அஞ்சப்படுவது தீய செயல்கள். தீய செயல்கள் தீமையை விளைவிக்கும் தன்மை உடையனவாக இருத்தலால், அத்தீய செயல்களைத் தீயை விடக் கொடியனவாகக் கருதி அஞ்ச வேண்டும்.

**14. ஒப்புரவினது சிறப்பை விளக்குக.**

ஒப்புரவால் கேடு வரும் என்ருல், அக்கேடு ஒருவன் தன்னை விற்ருவது மேற்கொள்ளும் தகுதி உடையதாகும்.

**15. ஈகையைப் பற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்துகளைத் தொகுத்து எழுதுக.**

தாம் சேர்த்துள்ள பொருளைப் பிறர்க்குக் கொடுக்காமல் வைத்திருந்து பின் இழந்து விடும் வன்கண்மை உடையவர், பிறர்க்குக் கொடுத்து மகிழும் மகிழ்ச்சியை அறியாதவர்களே.

சாவதை விடத் துன்பமானது வேறொன்று இல்லை; ஆனால், வறியவர்க்கு ஒரு பொருள் கொடுக்க முடியாத நிலை வந்தபோது அச்சாதலும் இனியதே ஆகும்.

## 16. புகழ்பட வாழாதார் கவனிக்க வேண்டுவது யாது ?

தமக்குப் புகழ் உண்டாகுமாறு வாழ முடியாதவர் தம்மைத் தாம் நொந்து கொள்ளாமல் தம்மை இகழ்கின்ற வரை நொந்து கொள்வது அறியாமையாகும்.

## 17. வாய்மை பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை ?

ஒருவன் தன் மனத்தோடு பொருந்த உண்மை பேசுவானானால் அவன் தவத்தோடு தானமும் ஒருங்கே செய்வாரைவிடச் சிறந்தவன்.

யாம் உண்மையாகக் கண்ட பொருள்களுள் வாய்மையைவிட எத்தன்மையாலும் சிறந்தவைகளாக சொல்லத் தக்கவை வேறு இல்லை.

## 18. வெகுளாமை பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை ?

சினம் என்னும் சேர்ந்தவரை அழிக்கும் நெருப்பு, ஒருவனுக்கு இனம் என்னும் இன்பத் தெப்பத்தையும் சுட்டழிக்கும்.

பல சுடர்களை உடைய பெரு நெருப்பில் தோய்ப்பது போன்ற துன்பத்தை ஒருவன் செய்த போதிலும், கூடுமானால் அவன் மேல் சினங்கொள்ளாதிருத்தல் நல்லது.

## 19. கேள்வி பற்றிக் குறள் கூறும் கருத்துகள் யாவை ?

செவிக்குக் கேள்வியாகிய உணவு இல்லாத போது அதற்குத் துணையாக உடலை ஓம்புமாறு வயிற்றுக்கும் சிறிது உணவு தரப்படும்.

நூல்களைக் கற்கவில்லையாயினும், கற்றறிந்தவரிடம் கேட்டறியவேண்டும்; அஃது ஒருவனுக்கு வாழ்க்கையில் தளர்ச்சி வந்தபோது ஊன்றுகோல் போல் உதவி செய்யும்.

### 20. அறிவுடைமையின் சிறப்பு யாது?

அறிவு, அழிவு வாராமல் காக்கும் கருவியாகும்; அன்றியும், பகை கொண்டு எதிர்ப்பவர்க்கும் அழிக்க முடியாத உள்ளரணும் ஆகும்.

### 21. உண்மை அறிவாவது யாது?

எப்பொருள் எத்தன்மையதாய்த் தோன்றினாலும் (அத்தோற்றத்தை மட்டும் கண்டு மயங்காமல்) அப்பொருளின் உண்மையான இயல்பை அறிவதே உண்மை அறிவாகும்.

### 22. எவ்வெவற்றைச் செய்வதனாலும் செய்யாமையாலும் துன்பம் உண்டாகும்?

ஒருவன் செய்யத்தகாத செயல்களைச் செய்வதனாலும் செய்யத் தக்க செயல்களைச் செய்யாமல் விடுவதனாலும் துன்பம் உண்டாகும்.

### 23. வலியறிதல் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துகளை எழுதுக.

மென்மையான மயில் இறகு ஏற்றிய வண்டியே ஆனாலும் அந்தப் பண்டத்தையும் அளவோடு ஏற்றாமல் அளவு கடந்து மிகுதியாக ஏற்றினால் அச்சு முறியும்.

பொருளின் அளவு அறிந்து வாழாதவனுடைய வாழ்க்கை பல வளமும் இருப்பது போல் தோன்றி இல்லாமல் மறைந்து கெட்டுவிடும்.

### 24. காலமறிதல் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துகளை எழுதுக.

எடுத்த செயலை முடிப்பதற்கு ஏற்ற காலத்தை அறிந்து இடத்தோடு பொருந்துமாறு செய்தால், உலகமே வேண்டும் எனக் கருதினாலும் கைகூடும்.

**25. இடமறிதல் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துகளை எழுதுக.**

வலிய சக்கரங்களை உடைய பெரிய தேர்கள் கடலில் ஓட முடியாது ; கடலில் ஓடுகின்ற கப்பல்களும் நிலத்தில் ஓட முடியாது ; யார் யாருக்கு எவ்வெவ்விடம் தமது வலிமைக்கு ஏற்றதோ அவ்வவ்விடங்களில் செயல்களைச் செய்யவேண்டும்.

**26. தெரிந்து வினை ஆள்வது எங்ஙனம் ?**

செய்கின்றவனுடைய தன்மையை ஆராய்ந்து, செயலின் தன்மையையும் ஆராய்ந்து, தக்க காலத்தோடு பொருந்துமாறு உணர்ந்து செய்விக்கவேண்டும்.

**27. செங்கோன்மை பற்றிய குறட் கருத்துகளை எழுதுக.**

உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் மழையை நோக்கி வாழ்கின்றன ; அதுபோல் குடிமக்கள் எல்லாம் அரசனுடைய செங்கோலை நோக்கி வாழ்கின்றனர்.

உலகத்தையெல்லாம் அரசன் காப்பாற்றுவான் ; நீதி முறை கெடாதவாறு ஆட்சி செய்வானாயின் அரசனை அந்த முறையே காப்பாற்றும்.

**28. இடுக்கண் அழியாமை பற்றிய குறட் கருத்துகளை எழுதுக.**

துன்பம் வந்தபோது அதற்காக வருந்திக் கலங்காதவர் அந்தத் துன்பத்திற்கே துன்பம் உண்டாக்கி அதை வென்று விடுவர்.

இன்பத்தை விரும்பாதவனாய்த் துன்பம் இயற்கையானது என்று தெரிந்து இருப்பவன், துன்பம் வந்தபோது துன்பம் அடைவது இல்லை.

**29. சொல்வன்மையின் சிறப்பு யாது ?**

ஆக்கமும் கேடும் சொல்கின்ற சொல்லால் வருதலால் ஒருவன் தன்னுடைய சொல்லில் தவறு நேராமல் காத்துக் கொள்ள வேண்டும்.

**30. படைச்செருக்கு என்னும் தலைப்பில் வந்துள்ள குறட்பாக்களின் பொருளைத் தொகுத்து எழுதுக.**

பகைவரை எதிர்க்கும் வீரத்தை மிக்க ஆண்மை என்று கூறுவர்; ஒரு துன்பம் வந்தபோது பகைவருக்கும் உதவி செய்தலை அந்த ஆண்மையின் கூர்மை என்று கூறுவர்.

தம்மைக்காத்த தலைவருடைய கண்கள் நீர் பெருக்குமாறு சாகப் பெற்றால், அத்தகைய சாக்காடு இரந்தாவது பெற்றுக் கொள்ளத்தக்க பெருமையுடையதாகும்.

**31. நட்புப் பற்றி வள்ளுவர் கூறுவது யாது?**

நட்புச் செய்வதற்கு தொடர்பும் பழக்கமும் வேண்டியதில்லை; ஒத்த உணர்ச்சியே நட்பு ஏற்படுவதற்கு வேண்டிய உரிமையைக் கொடுக்கும்.

**32. உட்பகையின் கொடுமையைக் குறித்து வள்ளுவர் கூறுவது யாது?**

வாளைப்போல் வெளிப்படையான பகைவருக்கு அஞ்சவேண்டியது இல்லை; ஆனல் உறவினரைப்போல் இருந்து உட்பகை கொண்டவரின் தொடர்புக்கு அஞ்ச வேண்டும்.

**33. பெருக்கத்துக்கும் சுருக்கத்துக்கும் மேற்கொள்ள வேண்டுவன யாவை?**

செல்வம் பெருகியுள்ள காலத்தில் ஒருவனுக்குப் பணிவு வேண்டும்; செல்வம் குறைந்து சுருங்கும் வறுமையுள்ள காலத்தில் பணியாத உயர்வு வேண்டும்.

**34. பண்புடைமை பற்றி வள்ளுவர் கூறுவது யாது?**

மக்களுக்குரிய பண்பு இல்லாதவர், அரம்போல் கூர்மையான அறிவுடையவரானலும், ஓரறிவுயிராகிய மரத்தைப் போன்றவரேயாவர்.

**35. உழவரின் சிறப்பை விளக்குக.**

உழவருடைய கை, தொழில் செய்யாது மடங்கியிருக்குமானல், 'விரும்புகின்ற எந்தப் பற்றையும் விட்டுவிட்டோம்' என்று கூறும் துறவிகளுக்கும் வாழ்வு இல்லை.

**இலக்கணக் குறிப்பு :**

1. பிறவிப் பெருங்கடல்—உருவகம்

பெருங்கடல் (பெருமை+கடல்)—பண்புத் தொகை

நீந்துவர் நீந்தார்—முரண் தொடை.

இச்செய்யுள் ஏகதேசவுருவகவணி. உருவகிக்க வேண்டிய இரண்டு பொருள்களில் ஒன்றை உருவகித்து மற்றொன்றை உருவகிக்காது விடுதல் ஏகதேசவுருவக அணியாம். இச்செய்யுளில் பிறவியைக் கடலாக உருவகித்த ஆசிரியர் இறைவனது திருவடிகளைப் புணையாக உருவகிக்க வில்லையாதலின் இப்பாடலில் பயின்று வரும் அணி ஏகதேசவுருவக அணியாகும்.

2. கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்—இன்னிசை யளபெடைகள்.

3. ஆதல் (ஆகுக)—வியங்கோள் வினைமுற்று.

4. பொன்றுத்துணை—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

5. அறம்—அறன்—போலி.

இப்பாடலில் பயின்று வரும் அணி முறை நிரல் நிறையணி.

7. அன்பிலவர்—இடைக் குறை.

8. இச்செய்யுளில் பயின்றுவரும் அணி உவமை யணி.

ஒரு செய்யுட்கண் உவமானமும் உவமேயமும் வந்து இடையே உவம உருபு தோன்ற நிற்றல்,

உவமை அணியாம். இச்செய்யுளில் எலும்பில்லாத உயிர்களை வெயில் வருத்துதல் உவமை; அன்பில்லாத உயிர்களை அறக்கடவுள் வருத்துதல் உவமேயம்; 'போல' உவம உருபு.

9. மிசைவான்—வினையாலணையும் பெயர்.

10. செல்விருந்து, வருவிருந்து—வினைத்தொகைகள்.
நல்விருந்து—பண்புத்தொகை.

11. செயினும்—இடைக்குறை.
துணையாக் கொள்வர்—தொகுத்தல் விகாரம்.

கொன்றன்ன (கொன்ற+அன்ன)—தொகுத்தல் விகாரம்.

13. செயின்—இடைக்குறை.

14. எழுமையும்—உம்மை முற்றும்மை.

15. காவாக்கால்—எதிர்மறை வினையெச்சம்.

17. படுபாக்கு—தொழிற் பெயர்.

19. கேடு—முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

20. அஞ்சப் படும்—வியங்கோள் வினைமுற்று.
தீயினும்—இழிவு சிறப்பும்மை.

இப்பாடலில் பயின்று வரும் அணி சொற் பொருட் பின் வருநிலையணி. ஒரு சொல் ஒரே பொருளில் (செய்யுளில்) மீண்டும் மீண்டும் வருமாயின் அது சொற் பொருட்பின்வருநிலையணி யாகும். இச்செய்யுளில் 'தீயவை' என்ற சொல் மீண்டும் மீண்டும் அதே பொருளில் வருவதால் சொற்பொருட்பின்வருநிலையணி யாகும்.

22. ஈத்துவக்கும்—வலித்தல் விகாரம்.
கொல்—ஐயப் பொருளில் வரும் இடைச் சொல்.
உடைமை—பண்பாகு பெயர்.

23. இனிததூஉம்—இன்னிசை யளபெடை.

24. தம்நோவார்—இரண்டாம் வேற்றுமைத்தொகை.

இகழ்வார்—வினையாலணையும் பெயர்.

26. மெய்யா—தொகுத்தல் விகாரம்.

28. செயினும்—இடைக்குறை—' உம்மை ' இழிவு சிறப்பு.

29. மெய்ப் பொருள்—பண்புத்தொகை.

30. வயிற்றுக்கும்—இழிவு சிறப்பும்மை.

31. கேட்க—வியங்கோள் வினைமுற்று.

ஊற்ரும்—வலித்தல் விகாரம்.

32. ஆகா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

33. செய—இடைக்குறை.

34. பெய் சாகாடு—வினைத்தொகை.

சாலமிகுத்து—உரிச் சொற்ரெடர்.

பெயின்—இடைக்குறை.

இச்செய்யுளில் பயின்று வரும் அணி பிறிது மொழிதல் அணியாம். பிறிது மொழிதல் அணியாவது சொல்ல வந்த கருத்தை விளக்கத்தக்க உவமானத்தை மட்டும் கொடுத்து உவமேயத்தை உய்த்துணர்ந்து கொள்ள வைப்பதாகும்.

இச்செய்யுட்கண் மயில் தோகை மென்மை யானதே யாயினும் அளவுக்கதிகமாக ஏற்றப்படுமாயின் வலிமை வாய்ந்த அச்சும் ஒடிந்துபோம் என்ற உவமை மட்டும் கொடுக்கப்பட்டுள்ளது. ஒருவன் வலிமை வாய்ந்தவனுயினும் வலிமையிற் குறைந்த பகைவர்கள் பலர் ஒன்று சேர்ந்து தாக்குவராயின் வலிமையிழந்து போவான் என்ற கருத்தை உய்த்துணரவைத்துள்ளார். எனவே இஃது பிறிது மொழிதல் அணியாம்.

35. அளவறிந்து—இரண்டாம் வேற்றுமைத்தொகை.

வாழாதான்—வினையாலணையும் பெயர்.

தோன்றா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

36. கருதினும்—உயர்வு சிறப்பும்மை.

37. இச்செய்யுள் பிறிது மொழிதல் அணி—(விளக்கம் 34-வது குறட் குறிப்பில் காண்க).

38. செயல்—செய்க—வியங்கோள் வினைமுற்று.

39. வானோக்கி / கோனோக்கி } இரண்டாம் வேற்றுமைத்தொகைகள்.

வான்—இடவாகு பெயர்.

இச்செய்யுளில் பயின்றுவரும் அணி எடுத்துக் காட்டுவமையணி. எடுத்துக்காட்டு உவமையணியாவது உவமானத்தையும் உவமேயத்தையும் கூறி இடையில் இரண்டையும் இணைக்கும் உவம உருபு கொடுக்காது விடுதல் ஆகும். இச்செய்யுளில் உலகு மழையை நோக்கி வாழும் என்ற உவமையையும் உலகம் மன்னனது செங்கோலை நோக்கி வாழும் என்ற உவமேயத்தையும் கூறிய புலவர் உவம உருபு கொடுக்கவில்லை. எனவே இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணியாம்.

40. முட்டா—ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

41. இச்செய்யுளில் பயின்றுவரும் அணி சொற்பொருட் பின்வருநிலை யணி (விளக்கம் 20-வது குறளுக்குரிய குறிப்பில் காண்க.)

படாஅ—செய்யுளிசையளபெடை.

42. விழையான்—முற்றெச்சம்.

44. பேராண்மை—பண்புத்தொகை.

45. புரந்தார்—வினையாலணையும் பெயர்.

47. அஞ்சற்க—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

அஞ்சுக—வியங்கோள் வினைமுற்று.

50. விழைவதூஉம்—இன்னிசையளபெடை.

## (ஆ) நாலடியார்

### 1. நாலடியார் நூற்குறிப்புத் தருக.

நான்கு அடிகளால் ஆன வெண்பாக்களால் ஆகிய நூல் ஆதலின் அப்பெயர் பெற்றது. 'ஆர்' என்பது சிறப்பைக் குறிக்கும் விகுதி

இந்நூலுக்கு நாலடி நானூறு; வேளாண் வேதம் என்னும் வேறு பெயர்களும் உண்டு.

அறநூல்களுள் இது திருக்குறளுக்கு அடுத்த சிறப்பை யுடையது. "ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்ற முதுமொழி இதன் சிறப்பை உணர்த்தும்.

### 2. கல்வியின் பயன்கள் யாவை ?

1. கல்வி நல்வாழ்க்கையாகிய இம்மைப் பயனை விளைவிக்கும்.

2. பிறருக்குக் கற்பித்தால் குறைவு படுதல் இல்லை.

3. தம்மை அறிவாலும் புகழாலும் விளங்கச் செய்யும்.

4. நாம் இருக்க அது அழிவது இல்லை. ஆதலால், எப்பிறவியின் கண்ணும் கல்வியைப் போல் அறியாமை மயக்கத்தைத் தீர்க்கும் மருந்தை யாம் கண்டதில்லை என்று கல்வியின் பயன்களை நாலடியார் நவில்கின்றது.

**இலக்கணக் குறிப்பு :**

ஆல்—அசை

கேடு—முதனிலை திரிந்த தொழிற் பெயர். 'கெடுதல்' என்ற தொழிற் பெயர் விகுதி கெட்டு, 'கெடு' என்னும் முதனிலை, 'கேடு' எனத் திரிந்து தொழிலை யுணர்த்திற்று.

காணோம்—தன்மைப் பன்மை வினைமுற்று.

உளரா—உளராக என்பதன் தொகுத்தல் விகாரம்.

**3. மேன் மக்கள் இயல்பு யாது? அவருக்குக் காட்டப்பெற்ற உவமையைக் குறிப்பிட்டு அது ஒப்பாவதையும் ஒவ்வாமையையும் விளக்குக.**

தங்கட்கு ஒரு சிறு இழுக்கு ஏற்பட்டாலும் மனந் தளர்ந்து அழிதல் மேன்மக்கள் இயல்பாகும். அவருக்கு உவமையாகக் காட்டப்பட்டது சந்திரன். ஒளி பரப்பு வதில் சந்திரன் மேலோர்க்கு ஒப்பானதாகும்.

சந்திரன் களங்கத்தோடும் நிலை பெற்றிருப்பதால் சிறு களங்கத்தையும் பொறுக்கமாட்டாது அழிகின்ற சான்ருேர்களோடு ஒப்பாகமாட்டாது.

**இலக்கணம்:**

இப்பாடலில் பயின்று வரும் அணி வேற்றுமை யணி. இரு பொருள்களுக்கு இடையே ஒற்றுமை தோன்றக் கூறி, ஒன்றில் மற்ருென்று உயர்ந்தது என்ருே தாழ்ந்தது என்ருே வேறுபடுத்திக் கூறுவது வேற்றுமையணியாம். இச்செய்யுளில் திங்களும் சான்ருேரும் ஒப்பாவர் என்று கூறித் திங்கள் மறுவாற்றும் சான்ருேர் அஃதாற்ருர் என்று வேறுபாடு கற்பித்தமையால் இச்செய்யுளில் பயின்று வரும் அணி வேற்றுமையணியாம்.

**4. அறிவுடையார் இயல்பு யாது? அதற்குக் கூறப்பட்ட உவமையை விளக்கு.**

அள்ளிக் கொள்ளுதல் போல நிறையச் சிறிய அரும்புகளுடையன ஆயினும் அவை சூடும் மலர்களல் லாமையால் கள்ளிச் செடியின்மேல் யாரும் கைநீட்ட மாட்டார்;

அதுபோலச் செல்வம் மிக உடையவர்களானுலும் அச்செல்வம் நன்மை பயவாமையால் கீழ்மக்களை அறி வுடையார் அணுகமாட்டார்கள்.

**இலக்கணக் குறிப்பு:**

அன்ன—உவம உருபு

உடையார்—வினையாலணையும் பெயர்

கீழ்—பண்பாகு பெயர். 'கீழ்மை' என்ற பண்புப் பெயர் அதனையுடைய மக்களுக்கு ஆகிவந்தது.

**5. பெரியவர், சிறியவர், நட்புக்குக் கூறப்பட்ட உவமைகளை விளக்கி எழுதுக.**

சான்றோர் நட்பு பிறைத் திங்களைப் போல ஒவ்வொரு நாளும் முறை முறையே வளரும்.

கீழோர் உறவு வானத்திலே தவழ்கின்ற முழுத் திங்களைப் போல ஒவ்வொரு நாளும் முறையாகத் தானே தேய்ந்தொழியும்.

**இலக்கணக் குறிப்பு:**

ஊர்மதியம்—வினைத்தொகை

வரிசை வரிசையாய்—அடுக்குத் தொடர்.

இச் செய்யுள் உவமையணி. உவமானமும் உவமேயமும் வந்து இடையில் உவம உருபுகள் வந்துள்ளன.

**6. நல்லினம் சேர்தலால் உண்டாகும் நன்மையை ஆசிரியர் எங்ஙனம் எடுத்துக் கூறியுள்ளார்?**

கொல்லையிலுள்ள மரக்கட்டையைச் சேர்ந்து வளர்ந்த புல், உழவரது உழுகின்ற படையாகிய கலப்பையால் கெடாதனவாகும். அதுபோல,

வலிமை இல்லாதவரேயாயினும் நல்லினம் என்னும் வலிய சார்பினைச் சார்ந்தவர் மேல் பகைவரது சினம் பயன்படாமற் போம்.

**இலக்கணக் குறிப்பு:**

நல்லினம் (நன்மை+இனம்)—பண்புத் தொகை

உழுபடை—வினைத் தொகை.

சார்ந்தார்—வினையாலணையும் பெயர்.

இச் செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி. உவமானமும் உவமேயமும் வந்து இரண்டினையும் இணைக்கின்ற உவமவுருபு இடையில் இன்மையால் இது எடுத்துக்காட்டு உவமையணியாயிற்று.

## (இ) பழமொழி

### 1. பழமொழி—குறிப்பு வரைக.

ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு பழமொழி அமைந்த நூலாகையால் இதற்குப் பழமொழி எனப் பெயர் அமைந்தது. இது நானூறு வெண்பாக்கள் கொண்ட நூலாகையால் 'பழமொழி நானூறு' எனவும் கூறப்படும். இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இந்நூலாசிரியர் பல அரிய பழமொழிகளை உவமைகளாக வும், மேற்கோள்களாகவும் கொண்டு அரிய நீதிகளை எடுத்துக் கூறியுள்ளார்.

### 2. பழமொழி—ஆசிரியர் குறிப்பு வரைக.

இந்நூலாசிரியர் முன்றுறையரையனர் என்பவர். சமண சமயத்தவர். காலம் : கி.பி. 5ஆம் நூற்றுண்டு.

### 3. 'குரங்கின் கைக் கொள்ளி கொடுத்து விடல்' என்னும் பழமொழியால் உணர்த்தப்படும் உண்மை யாது?

உடைமையாகிய மிக்க செல்வத்தினை உடைய உயர்ந்த பெருமை தரத்தக்க முதன்மையை, அடக்க மில்லாத உள்ளம் உடையவனுகி, ஒழுக்கத்திலும் தூய்மையற்றவனிடத்தில் கொடுத்தல், குரங்கினது கையில் கொள்ளியைக் கொடுத்து விடுதலை ஒக்கும்.

**இலக்கணக் குறிப்பு :**

உள்ளத்தன்—குறிப்பு வினையாலணையும் பெயர்

பெருஞ் செல்வம் (பெருமை+செல்வம்)—பண்புத் தொகை

### 4. கற்றறிந்தார் அடக்கத்துக்குக் கூறப்பட்ட உவமையை விளக்குக.

நீர் நிறைந்த குடம் ஆரவாரித் தலைதல் இல்லை ; (அது போல) நூல்களைக் கற்று அவைகளின் உண்மைகளை

அறிந்தவர்கள் ஆரவாரமின்றி அடங்கியிருப்பர். நூல் உண்மையையும் அனுபவ உண்மையையும் அறியாதார் மறந்து தங்களைத் தெளிவாக வாயாரப் புகழ்ந்து பேசுவர்.

**இலக்கணக் குறிப்பு:**

மலைநாட!—அண்மை விளி.

நிறை குடம்—வினைத்தொகை.

கற்றறிந்தார், அறியாதார்—வினையாலணையும் பெயர்கள்.

**5. 'மரம் போக்கிக் கூலி கொண்டார் இல்' என்னும் பழமொழியால் விளக்கப்படும் உண்மை யாது?**

மிகுந்த வழியைக் கடக்க விட்டு தீர்வைப் பொருள் அடைபவர்கள் இல்லை; ஓடத்தைச் செலுத்தி நிறுத்திய பின் கூலியைப் பெறுபவர்கள் இல்லை. (அவை போல) கல்வியைக் கற்றற்குரிய இளமையில் கல்லாதவன் முதுமையின்கண் கற்று வல்லவனுகான்.

**இலக்கணக் குறிப்பு:**

கொண்டார்—வினையாலணையும் பெயர்.

கற்கலான்—எதிர்மறை வினையாலணையும் பெயர்.

மரம்—பொருளாகு பெயர்.

**6. நாடறியப்பட்ட பெருஞ்செல்வரின் தன்மையை ஆசிரியர் எங்ஙனம் விளக்கிக் கூறியுள்ளார்?**

உணவு பெருமல் வாட்டமுற்று நரம்புகள் வலித்து, உடல் சுருக்கத்தை அடைந்து முதுமையால் படுத்தே கிடப்பினும், அங்ஙனம் கிடக்கும் புலியது தலையை, நாய் சென்று முகர்ந்து பார்த்தல்கூட இல்லை. (ஆகையால்) உலகத்தாரால் அறியப்பட்ட மிகுந்த செல்வத்தினை யுடையார், வறுமையுற்றுத் தளர்ந்த இடத்தும் பிறருக்குத் தாழ்வாகத் தோன்றமாட்டார்.

**இலக்கணக் குறிப்பு:**

வட்குபவோ—ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

7. தம்மைப் புரந்தவர்க்குக் கேடு சூழ்தல் எது போன்றது ?

ஒருவன் தன்னை ஆதரித்து வேண்டிய உதவிகளைச் செய்தவருக்கு, அவரது பகைவரோடு சேர்ந்து தீமை செய்ய எண்ணுதல், அறிவின்றி தான் அமர்ந்திருக்கும் கிளையின் அடிப்பாகத்தை வெட்டிவிடுவதை ஒக்கும்.

**இலக்கணக் குறிப்பு :**

புரந்தார்—வினையாலணையும் பெயர்.

கிளர்மணி—வினைத்தொகை.

## (ஈ) இன்னிலை

1. இன்னிலை—குறிப்பு எழுது.

இனிமை + நிலை = இன்னிலை.

அறம், பொருள், இன்பம் வீடுகளின் இனிய நிலைகள் பலவற்றை எடுத்துக் கூறுவதால் இன்னிலை எனப் பெயரமைந்தது. ஆசிரியர் பொய்கையார். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

2. நல்லறனை நாளணி கொள்வார் யாவர் ?

தம்மிடமிருந்து நீங்கிய பொருள்களைக் குறித்து வருந்தாதவரும், கோபத்தை மேற்கொள்ளாதவரும், வெகுண்டு பழி மிகுதியாகும்படி அதற்குரிய செயல்களைச் செய்யாதவரும், அறப்பயனை நீக்கிக் கொடுக்கும் முதற் பொருளைத் தமது வீட்டிற் கொண்டுபோய்ச் சேர்த்துச் செல்வத்தைப் பெருக்காதவரும் (ஆகிய அறிஞர்) துன்பமாகிய கட்டினை அறுத்து நன்மையைத் தரும் அறத்தை நாள்தோறும் தமக்கு அணியும் அணியாகக் கொள்வார்.

**இலக்கணக் குறிப்பு :**

கழிவிரக்கம்—நான்காம் வேற்றுமைத்தொகை.

அழிமுதல்—வினைத்தொகை.

கொள்ளார், ஆளார், கோடார், ஆக்கார்—எதிர்மறை வினையாலணையும் பெயர்கள்.

**3. உதவி செய்பவரிடத்துக் குற்றம் இருப்பினும் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்பதை விளக்க ஆசிரியர் கூறும் உவமை யாது ?**

இடிவிழச் செய்கின்றது என்று நினைத்து, சிறிதும் மேகத்தை வெறுக்கமாட்டார்; தம் உயிரைப் போக்குவார் இவர் என்று தெரிந்தாலும் அத்தகைய கொடியோர் உயிரை நாம் முதலில் போக்குவது நலம் என்று பெரியோர் கருதமாட்டார்; தனது கன்று விரும்பி மடியைக் கடித்தாலும் (தாய்ப் பசு) இனிய பாலினைச் சொரியும். கூடி வாழ அறியாத மக்கள் ஆட்டுக் கடாக்கள் போன்றவர்.

**இலக்கணக் குறிப்பு :**

காயார், முன்னுர்—பலர்பால் படர்க்கை எதிர்மறை வினை முற்றுக்கள்.

**4. அறிஞர் கண்ட நெறி யாது ?**

அறிஞர் **கண்ட** நெறி :—தன்னிடத்தில் உள்ள பொருளுக்கு ஏற்றவாறு செலவழித்து நடப்பது பொருத்தம் என்றுலும், செலவழிக்கவேண்டிய இடத்தில் வெள்ளத்தைப்போல அதிகமாகச் செலவு செய்து நடப்பதை விரும்பற்க என்பதும்; ஒரு மனைக்கு உரிமையுடைய தலைவன் தன் பொருளளவிற்கு மேற்பட்ட முயற்சியை விலக்கவேண்டும் என்பதும் தெளிந்த அறிவுடையோர் கண்ட வழிகளாம்.

**இலக்கணக் குறிப்பு :**

அன—உவம உருபு.

உள்ளவா—உள்ளவாறு என்பதன் தொகுத்தல் விகாரம்.

செல் + தல் = சேறல்.

மனைக்கிழவன்—நான்காம் வேற்றுமைத்தொகை.

தள்ளளவு—வினைத் தொகை.

# III. தொடர் நிலைச்செய்யுள்

## (அ) சிலப்பதிகாரம்

### 1. சிலப்பதிகாரம் நூற் குறிப்பும் ஆசிரியர் குறிப்பும் தருக.

நூற் குறிப்பு: சிலம்பு+அதிகாரம்=சிலப்பதிகாரம். கண்ணகியின் சிலம்பினுல் அதிகரித்த கதையைக் கூறுவதால் இதற்குச் சிலப்பதிகாரம் என்று பெயர் ஏற்பட்டது. இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் விரவிவர இயற்றப்பட்டமையின் இந்நூல், முத்தமிழ்க் காப்பியம் எனவும் கூறப்படும். இஃது ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று.

ஆசிரியர் குறிப்பு: இந்நூலை இயற்றியவர் இளங்கோவடிகள். பெற்றோர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், நற்சோணையும் ஆவார்.

தமையன்—சேரன் செங்குட்டுவன்.

காலம்—கி.பி. இரண்டாம் நூற்றுண்டு.

### 2. சிலப்பதிகாரம் கூறும் மூன்று நீதிகள் யாவை?

(1) அரசியல் பிழைத்தோர்க்கு அறமே கூற்றுகும்.

(2) உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்.

(3) ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்பன, சிலப்பதிகாரம் கூறும் மூன்று நீதிகளாகும்.

### 3. கண்ணகி வாயிற்காவலனிடம் உரைத்தது யாது?

கண்ணகி வாயில் காவலனை நோக்கி, "வாயிற் காப்போனே! அறிவு முழுவதும் அழிந்து, சிந்திக்கும் ஆற்றல் அற்று, அரச முறையிலிருந்து தவறிய பாண்டிய மன்னனின் வாயிற் காப்போனே! தன் காலில் அணியும் பரல் கற்கள் நிறைந்த இரண்டு சிலம்புகளில் ஒன்றைக் கையிலேந்திய பெண் ஒருத்தி, தன் கணவனை இழந்தவளாக உன் அரண்மனை வாயிலில் வந்துள்ளாள் என்று அறிவிப்பாயாக!" என்று கூறினுள்.

**4. வாயிலோன் பாண்டிய மன்னனை எவ்வாறு வாழ்த்தினன் ?**

வாயிலோன் பாண்டியனை வாழ்த்தியதாவது :—

"எமது கொற்கை நகரத்து அரசே வாழ்வாயாக! தெற்கின் கண் பொதிகை மலையையுடைய தலைவனே வாழி! செழியனே வாழி! பாண்டியனே வாழி! மற நெறிக்கண் செல்லாத பஞ்சவனே நீ வாழ்வாயாக!" என்று பாண்டிய மன்னனை வாழ்த்தினன்.

**5. வாயிலோன் பாண்டிய மன்னனிடம் கூறிய செய்தி யாது ?**

வாயிலோன் பாண்டிய மன்னனை விளித்து மகிடாசுரனது தலையாகிய இருக்கையின்மீது ஏறி நிற்கும் கொற்றவை போன்றும், கன்னியர் எழுவருளும் இளையவளாகிய பிடாரி போன்றும், இறைவனை நடமாடச் செய்த பத்ரகாளி போன்றும், காட்டை இடமாகக் கொண்ட காளி போன்றும், தாருகனது மார்பைப் பிளந்த துர்க்கை போன்றும் தோற்றமளிக்கும் கணவனை இழந்தவளாகிய பெண், ஒற்றைச் சிலம்பினைக் கையிலேந்தி அரண்மனை வாயிற்புறத்தே நிற்பதாகக் கூறினன்.

**6. பாண்டியன் கண்ணகியிடம் வினவியது யாது ?**

பாண்டிய மன்னன் "நீர் ஒழுகும் கண்களை உடையாய்! எம் முன்னர் வந்து நின்றோய்! இளங்கொடி போல்வாய்! நீ யார் ?" என்று கேட்டான்.

**7. 'யாரையோ நீ ?' என்ற பாண்டியனுக்குக் கண்ணகி உரைத்த மறுமொழியினை இருபது வரிகளில் தொகுத்தெழுதுக.**

கண்ணகி உரைத்த மறுமொழி :—"அரசருக்குரிய ஆராய்ச்சி இல்லாத மன்னனே! நின்னிடத்துச் சொல்லத் தகுவது ஒன்றுடையேன் யான். இகழ்தல் அற்ற சிறப்பினை உடைய தேவர்களும் இறும்பூது எய்தப் புறுவொன்று உற்ற மிக்க துன்பத்தினைப் போக்கிய சிபிச் சக்ரவர்த்தியும், கடைவாயிலினிடத்துக் கட்டிய மணியின்

நடுவிலுள்ள நா அசைய பசு ஒன்றின் கண்மணிக் கடை யினின்றும் ஒழுகும் நீர் தன்னுடைய உள்ளத்தைச் சுடுத லான் தானே தன்னுடைய பெறுதற்கரிய மகனைத் தேர்க் காலிலிட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனும் ஆகிய இவரது மிக்க புகழினையுடைய புகார் நகரமே யான் பிறந்த ஊர்; அவ்வூரின் கண் பழிப்பில்லாத சிறப்பினையுடைய புகழ் யாங்கணும் சென்று விளங்கும் பெருங்குடிக்கண் மாசாத்து வான் என்னும் வணிகனுடைய புதல்வனாகத் தோன்றி, பொருள் ஈட்டி வாழ்க்கை நடத்தலை விரும்பி, முன்னைத் தீவினை செலுத்தலானே நினது மதுரை நகரத்தின்கண் புக்கு, இந்நகரிடத்தே என்னுடைய காலின்கண் அணியும் சிலம்பொன்றனை விற்றல் காரணமாக நின்னிடத்துக் கொலையுண்ட கோவலன் என்பானுடைய மனைவி யாவேன்; என் பெயர் கண்ணகி எனப்படும் என்று கூறினாள்.

## 8. தன் கணவன் கள்வன் அல்லன் என்பதைக் கண்ணகி எங்ஙனம் புலப்படுத்தினாள்?

பெண்ணணங்கே "கள்வனைக் கொல்வது கொடுங் கோல் ஆகாது; அது அரச நீதியேயாகும்" எனப் பாண்டியன் பகர்ந்தான்.

அது கேட்ட கண்ணகி அறநெறியில் செல்லாத கொற்கை நகரத்து அரசனே! எனது சிலம்பின் உள்ளிடு பரல்கள் மாணிக்கமே என்று கூறினாள்.

அதனைச் செவி மடுத்த பாண்டியன் அவள் கூற்று நன்மையே ஆகும் என்று கூறித் தன் தேவியின் சிலம்பின் பரல்கள் முத்துக்களே என்று கருதி கோவலனிடமிருந்து பெற்ற சிலம்பினைக் கொண்டுவருமாறு ஆணையிட்டு வருவித்துத் தானே அதனைக் கண்ணகியின் முன் வைத்தான்.

கண்ணகி அச்சிலம்பினை உடைத்தாள்; அதிலிருந்த மாணிக்கப் பரல் பாண்டியனது முகத்தில் தெறித்து வீழ்ந்தது.

மணி கண்ட மன்னன், 'கோவலனைக் கள்வன் என்று கூறிய நானே கள்வன்' என்று கூறி மயங்கி விழுந்தான்.

இவ்வாறு கண்ணகி தன் கணவன் கள்வன் அல்லன் என்பதைப் புலப்படுத்தினாள்.

## 9. கோப்பெருந்தேவியின் கற்புத்திறனை விளக்குக.

பாண்டிய மன்னன் 'கெடுக என் ஆயுள்' எனக் கூறி அரியணையிலிருந்து மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான்.

அவனது மனைவி கோப்பெருந்தேவி உள்ளம் குலைந்து உடல் நடுக்குற்று, தாய், தந்தை முதலாயினோரை இழந்தவர்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டுதல் கூடும்; ஆயின் கணவனை இழந்த மகளிர்க்கு அங்ஙனம் சொல்லிக் காட்டலாவது ஒன்றில்லை என்று கருதி தன் கணவனுடைய இரண்டு அடிகளையும் தொட்டு வணங்கி நிலத்து வீழ்ந்தாள்.

இந்நிகழ்ச்சியிலிருந்து கோப்பெருந்தேவியின் கற்புத் திறனை அறியலாம்.

## 10. இடஞ்சுட்டிப் பொருள் விளக்குக.

(அ) "கணவனை இழந்தாள் கடையகத்தாள்"

**இடமும் பொழுதும்:** கண்ணகி தன் வழக்கைப் பாண்டியனிடம் கூற, அவரது அரண்மனை வாயிலை அடைந்து வாயில் காப்போனிடம் தன் வருகையை அரசனிடம் அறிவிக்கும்போது 'கணவனை இழந்தாள், கடையகத்தாள்' என்று கூறினாள்.

**விளக்கம்:** கண்ணகி, பாண்டியனின் வாயில் காப்போனிடம் கணவனை இழந்தாளொருத்தி கையில் ஒற்றைச் சிலம்புடன் வந்து அரண்மனை வாயிலில் உள்ளாள் என்று அரசர்க்கு அறிவிக்குமாறு கூறினாள்.

(ஆ) "வருக மற்றவள் தருக ஈங்கு"

**இடமும் பொழுதும்:** பாண்டிய மன்னனின் வாயில் காப்போன் மன்னனிடத்துச் சென்று கண்ணகியின் வருகையைக் கூறியவுடன் பாண்டிய மன்னன் "வருக மற்றவள் தருக ஈங்கு" எனக் கூறினான்.

**விளக்கம்:** மன்னன் வாயிலோனிடம் அவளை அங்கு அழைத்து வருமாறு கூறினான்.

(இ) "நீர்வார் கண்ணை யெம்முன் வந்தோய்
யாரை யோநீ மடக்கொடி ?"

**இடமும் பொழுதும்:** வாயிற் காவலனால் உள்ளே அழைத்து வரப்பட்ட கண்ணகி, பாண்டியன் திருமுன்னர் வந்துற்றாள். அப்போது பாண்டியன்,

"நீர் வார்கண்ணை யெம்முன் வந்தோய்
யாரை யோநீ மடக்கொடி?" என வினவினான்.

**விளக்கம்:** பாண்டிய மன்னன் "நீர் ஒழுகும் கண்களோடு எனக்கு முன்னே வந்த இளங்கொடி போன்ற பெண்ணே! நீயார் என்று வினவினான்,

(ஈ) "கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று
வெள்வேல் கொற்றங் காண்"

**இடமும் பொழுதும்:** கண்ணகி பாண்டியனிடம் தனது வழக்கை எடுத்துரைத்தாள். அது கேட்ட பாண்டியன்,

"கள்வனை........காண்" என விளக்கிக் கூறினான்.

**விளக்கம்:** பாண்டியன், அணங்கு போலும் பெண்ணே, எனக் கண்ணகியை விளித்து "கள்வனைக் கொலை செய்தல் கொடுங்கோன்மையாகாது; மேலும் அதுவே அரச நீதியும் ஆகும்" என்று எடுத்து விளக்கினான்.

(உ) "யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே"

**இடமும் பொழுதும்:** கண்ணகி தன் கணவன் கள்வன் அல்லன் என்பதை மெய்ப்பிக்கத் தனது சிலம்பின் உள்ளிடு பரல்கள் மாணிக்கங்கள் என மொழிந்தாள். அது கேட்ட பாண்டிய மன்னன் இவள் கூறிய மொழிகள் மிகவும் நல்லன எனக் கருதி,

"யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே" எனவும் தன் உள்ளத்தில் எண்ணினான்.

**விளக்கம்:** கண்ணகி தனது சிலம்பின் உள்ளிடு பரல்கள் மாணிக்கங்கள் என்று சொல்ல மன்னன் அதுவும் நல்லதே எனக் கருதி தனது சிலம்பின் பரல்கள் முத்துக்களே என்று தன் உள்ளத்தே கருதினான்.

(ஊ) "யானோ அரசன்! யானே கள்வன்!"

**இடமும் பொழுதும்:** கண்ணகி, கோவலனிடமிருந்து அரசன் பெற்ற சிலம்பினைக் கொணரச் செய்து, அதனைத் தரையில் வீசி எறிந்து உடைத்தாள். அதிலிருந்து ஒரு மாணிக்கக் கல் பாண்டிய மன்னனின் வாயில் தெறித்து வீழ்ந்தது. அது கண்ட பாண்டியன்,

"யானோ அரசன்! யானே கள்வன்" எனக் கூறி அரியணையிலிருந்து மயங்கி வீழ்ந்தான்.

**விளக்கம்:** பாண்டியன் தான் செய்த தவறு உணர்ந்து "கோவலனை ஆராயாது கொன்ற நான் ஒரு அரசனாவேனோ? அவன் கள்வன் அல்லன்; அவனைக் கள்வனென்று கூறிய நானே கள்வன்' என்று கூறி மயங்கி விழுந்தான்.

(எ) "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்"

**இடமும் பொழுதும்:** பாண்டிய மன்னன் தான் கோவலனுக்கு இழைத்த கொடுமையை எண்ணி அரியணையிலிருந்து மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான். அது கண்ட அவனது மனைவி கோப்பெருந்தேவி "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்" என்று கருதி தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடுமாறு போல அவனது திருவடிகளைத் தொழுது நிலத்தில் வீழ்ந்தாள்.

**விளக்கம்:** கோப்பெருந்தேவி தாய் தந்தை முதலியோரை இழந்தோர்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டுதல் கூடும். ஆனால் கணவனை இழந்த மகளிர்க்கு அங்ஙனம் சொல்லிக் காட்டுவது இயலாது என்று கருதி தனது கணவனது திருவடிகளைத் தொழுது நிலத்தில் வீழ்ந்தாள்.

**இலக்கணக் குறிப்பு:**

வீழ்மார்பு—வினைத்தொகை.
அரிமான்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
அறுநெஞ்சம்—வினைத்தொகை.
இறைமுறை—ஆறும் வேற்றுமைத்தொகை.
பிழைத்தோன்—வினையாலணையும் பெயர்.

அரிச்சிலம்பு—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

தென்னம் பொருப்பு—'அம்' சாரியை.

படரா } ஈறு கெட்ட எதிர்மறைப்
அடங்கா } பெயரெச்சங்கள்.

எழுகுருதி—வினைத்தொகை.

பசுந்துணி—பண்புத்தொகை.

மடக்கொடி—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

தடக்கை—உரிச்சொற்றொடர்.

பேருரம் (பெருமை+உரம்)—பண்புத்தொகை.

**குறுகினள்** சென்றுழி—முற்றெச்சம்.

**தேரா** மன்னா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

ஆவின் கடைமணி—முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை.

உகுநீர்—வினைத்தொகை.

கழல்மன்னா—இரண்டாம் வேற்றுமையுருபும், பயனும் உடன் தொக்கத்தொகை.

கோறல் (கொல்தல்) முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

ஒள்ளிழை—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

தேமொழி (தேன்+மொழி)—உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

நற்றிறம் (நன்மை+திறம்)—பண்புத்தொகை.

கெடுக !—வியங்கோள் வினைமுற்று.

**குலைந்தனள்** நடுங்கி—முற்றெச்சம்.

மடமொழி—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

## (ஆ) மணிமேகலை

### 1. மணிமேகலையைப் பற்றிக் குறிப்பு எழுதுக.

மணிமேகலை ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகளான மணிமேகலையின் வரலாற்றைக் கூறுவதால் மணிமேகலை என்று பெயராயிற்று. 'மணிமேகலைத் துறவு' என்றும் பெயர் உண்டு.

### 2. சீத்தலைச் சாத்தனாரைப் பற்றிக் குறிப்பெழுதுக.

மணிமேகலையை இயற்றியவர் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பவராவார். சீத்தலை என்னும் ஊரில் பிறந்தவர்; பதினெண் கூலங்களை (தானியங்களை) விற்று வாழ்க்கை நடத்தியமையால் கூல வாணிகன் என்ற சிறப்புப் பெயர் பெற்றார். இவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவர்.

### 3. அமுத சுரபியின் இயல்பு யாது?

அமுத சுரபியின் இயல்பு :—

கற்பிற் சிறந்த ஆதிரை நல்லாளால், பகுத்து உண்ணும் உணவினைப் பெற்ற அமுத சுரபியில் உள்ள பெரிய சோற்றுத் திரள், அறவழியிலே சம்பாதித்த சிறந்த பொருள் அறம் செய்வோன் கருத்தின் வழியே சென்று பயன் படுவது போல வாங்கும் கைகள் வருந்தும்படி உயிர்களுக்கு மிகுதியாகக் கொடுத்தும் தான் குறைவு படாத தன்மையை யுடையது.

### 4. காய சண்டிகை மணிமேகலையிடம் வேண்டியது யாது?

'யானைத்தீ' என்னும் பெரிய பசி நோயினைத் தன் வயிற்றில் கொண்ட காய சண்டிகை என்னும் பெண், மணிமேகலையை வணங்கி, "திருமால் மயக்கத்தால் பூமியின் மீது இராமனாகத் தோன்றி வெல்லுதற்கரிய கடலை அடைந்தபொழுது, குரங்குகள் கொண்டு வந்து வீசிய பெரிய மலைகள் எல்லாம் கடலின் வயிற்றினுள்ளே புகுந் தாற் போல, உண்ட உணவுகளால் தணியாத நெருப்புப் போன்ற கொடிய பசியை எனது முன்வினைப் பயனால்

நான் அடைந்தேன். தாயே! நீ கேட்பாயாக! அரிய உயிரை பாதுகாக்கவல்ல மருந்தினையுடையாய்! மிகுதி யான எனது பசிப் பிணியை நீக்கி அருள்வாயாக'' என்று மணிமேகலையிடம் வேண்டினள்.

**5. காய சண்டிகையின் பெரும்பசி எவ்வாறு நீங்கியது?**

மணிமேகலைதான் கையிற்கொண்ட அமுத சுரபியி லுள்ள அன்னத்தை எடுத்துப் பிடியாக அவள் கையில் இட, காய சண்டிகை வயிற்றில் எரிகின்ற கொடிய பசி நீங்கத் தன் துயரமும் நீங்கினள்.

**6. காய சண்டிகை சாபம் பெற்ற வரலாற்றைத் தொகுத்து இருபது வரிகளில் எழுதுக.**

காய சண்டிகை சாபம் பெற்றமை குறித்துக் கூறியது:—

''வடதிசையில் குற்றமற்ற வெள்ளிய ஒளியினை யுடைய விஞ்சையர் உலகில் குற்றமற்ற காஞ்சனபுரம் என்னும் காவல் அமைந்த நகரத்தில் உள்ள யான், எனது தீவினையால் என் கணவனோடு தென் திசையிலுள்ள பொதிகை மலையின் வளங்காணும் பொருட்டு வந்தேன். வேகமாகச் செல்லும் நீர் அருவியினது தெள்ளிய இடு மணலையுடைய கான்யாற்றில் என் கணவனுடன் கூடி யிருந்தேன். அப்பொழுது முப்புரிநூல் மார்பும், முறுக்கிய நீண்ட சடையும், மரவுரி ஆடையும் உடைய விரிச்சிகன் என்னும் முனிவன் பெரிய பனம் பழம் போன்ற கனிந்த நாவற் பழம் ஒன்றைக் கையில் ஏந்திவந்து, ஒரு தேக்கின் இலையில் வைத்துவிட்டுப் பொய்கையில் நீராடச் சென்றான். எனது தீவினை பயன் கொடுக்கத் தோன்று தலின் நான் அங்குத் தருக்கொடு சென்று காலினாலே அந்த நாவற் பழத்தை அழித்தேன். உண்ணும் விருப் பத்தோடு நீராடி வந்த விருச்சிக முனிவன் அப்பழத்தினைச் சிதைத்த என்னைப் பார்த்தனன். ''பன்னீராண்டிற்கு ஒரு முறை பழம் கொடுப்பது அம்மரம். தெய்வத் தன்மை யுடைய பழத்தினை உண்டவர் பன்னிரண்டு ஆண்டு கட்குப் பசி நீங்கப் பெறுவர். நானோ பன்னிரண்டு ஆண்டு களில் ஒரு நாள் உண்பதல்லது பிறநாளில் உண்ணாத நோன்பினை உடையவன். அத்தகைய நான் இன்று

உண்டற்குரிய அக்கனியைக் கெடுத்தாய்! ஆகவே விண்வெளியில் செல்லும் மந்திரத்தை இழந்து 'யானைத் தீ' என்னும் பசி நோயால் மிக்க துன்பமடைந்து வருந்தி பன்னிரண்டு ஆண்டுகள் சென்றபின் முதிர்கின்ற நாவற் கனியை நான் இங்கு உண்ணும் நாளில் நினது மிக்க பசியைப் போக்குவாய்" என்று நான் நாவற் கனியை அழித்தபோது அம்முனிவன் சாபம் கொடுத்தான்."

**7. காய சண்டிகையின் துன்பத்தைப் போக்க விஞ்சையன் மேற்கொண்ட முறையைப் புலப் படுத்துக.**

காய சண்டிகையின் துன்பத்தைக் கண்ட விஞ் சையன் விசும்பின் மீது எழுவாயாக' என்று கூறினான்.

காய சண்டிகை 'வானிற் செல்லும் மந்திரத்தை மறந்து விட்டேன்' என்று கூறினாள்.

'உடம்பினின்றும் உயிர் நீங்கத் தக்க வெப்பத்துடன் தோன்றி வயிற்றினை வருத்தும் பெரும் பசி வாட்டுகின்றது' என்று காய சண்டிகை கூறினாள்.

உடனே விஞ்சையன் நல்ல காய், கனி கிழங்குகளைக் கொண்டு வந்து கொடுத்தும் பசி தணியாதவளானாள் காய சண்டிகை.

**8. விஞ்சையன் காய சண்டிகையைப் பார்த்துக் கூறியது யாது?**

"நாவலந் தீவில் தமிழகத்தில் பெரும் செல்வத்தை யுடையோர் வறியோர்க்கு வழங்கும் துணைவராகி வாழ் வதும், முற்பிறப்பில் தவம் புரிந்தோர் வாழ்கின்ற பெருமையுடையதும் ஆகிய நகரம் ஒன்றுண்டு. பல நாட்களானாலும் நடந்து சென்று அந்நகரத்தை அடைக" என்று விஞ்சையன் காய சண்டிகையைப் பார்த்துக் கூறினான்.

**9. காய சண்டிகை உலக அறவியைப் பற்றிக் கூறியவை யாவை?**

காய சண்டிகை உலக அறவியைப் பற்றிக் கூறி யவை: "துக்கத்தைப் போக்கும் குற்றமற்ற பெருந் தவத்தோர்கள் வாழ்கின்ற சக்கரவாளக் கோட்டம்

என்பது ஒன்று உண்டு. அதன்கண் பலரும் செல்லுமாறு திறக்கப்பட்டிருக்கின்ற பிளந்த வாய்போலும் வாயிலினை யுடைய உலக அறவி என்னும் ஊரம்பலம் ஒன்று உண்டு. அதன் கண் ஊர்தோறும் மிக்க பசியால் வருந்துகின் றோம், பாதுகாப்போர் ஒருவரும் இன்மையின் அரிய நோயுழந்தோருமாய் அன்னமிடு வோரை ஆராய்ந்து இருக்கின்றவர் பலராவர்''.

**10. பின் வருவனவற்றிற்கு நிகழிடமும் பொழுதுங் காட்டி விளக்கவுரை எழுதுக.**

(அ) "ஆரணங் காகிய அருந்தவன் தன்னல்
காரணம் இன்றியும் கடுநோய் உழந்தனை''

**இடமும் பொழுதும்:** காய சண்டிகை முனிவன் வைத்துச் சென்ற நாவற் கனியைக் காலால் அழித்துச் சிதைத்தாள். அது கண்ட முனிவன், அவளுக்குச் சாப மிட்டபின் அதனை அறிந்த விஞ்சையன்.

"ஆரணங்..............உழந்தனை'' என்று கூறினன்.

**விளக்கம்:** அரிய தெய்வத் தன்மையுடைய அருந்தவனல் காரணமின்றிக் கனியைச் சிதைத்துக் கடிய நோயால் வருந்தலுற்றனை என விஞ்சையன் கூறினன்.

(ஆ) "தணிவில் வெம்பசி தவிர்த்தனை;
வணங்கினேன்;
மணிமேகலை! என் வான் பதிப் படர்கேன்.''

**நிகழிடமும் பொழுதும்:** மணிமேகலை காய சண்டிகை யின் பெரும் பசியை நீக்கினள். அப்போது காய சண்டிகை மணிமேகலையைப் பார்த்து 'மணிமேகலையே! எனது தணிதலில்லாத கொடிய பசியை நீக்கினய். நின்னை வணக்கஞ் செய்தேன். இனி எனது சிறந்த உலகாகிய காஞ்சன புரத்திற்குச் செல்வேன்'' என்று பகர்ந்தாள்.

(இ) "ஆபுத்திரன்கை அமுதசுரபி இஃது''

**நிகழிடமும் பொழுதும்:** மணிமேகலை அமுத சுரபி யோடு உலக அறவிக்குச் சென்று "ஆபுத்திரன் கை அமுத சுரபி இஃது! ஏற்போர் யாவரும் வருக!'' என்று கூறினள்.

**விளக்கம் :** மணிமேகலை அமுத சுரபியோடு உலக அறவிக்குச் சென்று "ஆபுத்திரன் கையிலிருந்த அமுத சுரபியாகும் இது ; ஏற்போர் யாவரும் வருக" என்று கூறி அழைத்தாள்.

**11. பின் வரும் உவமைகளைப் பொருளோடு பொருத்தி விளக்கவுரை எழுதுக.**

(அ) "அறத்தின் ஈட்டிய ஒண் பொருள் அறவோன்
திறத்துவழிப்படூஉம் செய்கை"

அறநெறியில் சம்பாதித்த சிறந்த பொருள் அறம் செய்வோன் கருத்தின் வழியே சென்று பயன்படுவது போல ஆதிரை என்பாளிடமிருந்து மணிமேகலை பெற்ற அமுதசுரபி, சோற்றுத்திரளை வாங்கும் கைகள் வருந்துமாறு உயிர்கட்கு மிக அளித்தும், தான் குறைவுபடாத தன்மையை உடையது.

இங்கு ஆதிரையிடமிருந்து மணிமேகலை பெற்ற அமுத சுரபிக்கு அறநெறியில் சம்பாதித்த சிறந்த பொருள்களும், மணிமேகலை கருதியவாறு மன்னுயிர்கட்கு உணவு அளிக்க அது பயன் படுதற்கு பொருள் அறவோன் திறத்து வழிப்படுதலும் உவமையாயின.

(ஆ) "குரங்கு கொணர்ந் தெறிந்த நெடுமலை எல்லாம்
அணங்குடை அளக்கர் வயிறுபுக் காங்கு"

திருமால் புவியில் இராமனாகத் தோன்றி கடலை அடைந்தபொழுது குரங்குகள் கொண்டு வந்து வீசிய பெரிய மலைகளெல்லாம் கடலின் வயிற்றுள்ளே புகுந்த செயல் காய சண்டிகை மிகுதியாக உண்டும் தணியாத கொடிய பசிக்கு உவமையாக வந்தது.

(இ) "வெயில் சுட வெம்பிய வேய்கரி கானத்துக்
கருவி மாமழை தோன்றிய தென்ன"

சூரியனின் கதிர்களால் சுடப்பட்டு வெம்பிய மூங்கில் கரிந்த காட்டில், தொகுதியாகிய முகில்கள் தோன்றி மழையைப் பொழிந்தது போல பசி உடலைத் தின்ன வருந்திய துன்பமுடைய மக்களுக்கு, மணிமேகலை அமுத சுரபியால் உணவளித்தாள்.

சூரியனின் கதிர்களால் சுடப்பட்டு வெம்பிய மூங்கில் கரிந்த காடு பசி நோயால் வருந்திய மக்களுக்கும், தொகுதி யாகிய முகில்கள் தோன்றி மழை பொழிந்தது, மணி மேகலை அமுத சுரபியால் உணவளித்தமைக்கும் உவமை களாயின.

**இலக்கணக் குறிப்பு :**

பாத்தூண்—பாத்து, பகுத்து என்பதன் மரூஉ.

ஒண்பொருள் (ஒண்மை+பொருள்)-பண்புத்தொகை.

படூஉம்—செய்யுளிசையளபெடை.

வாங்குகை—வினைத்தொகை.

இல்லாத்தகைமை—ஈறுகெட்ட எதிர்மறைப் பெய ரெச்சம்.

வயிற்றடக்கிய - ஏழாம் வேற்றுமைத்தொகை.

முந்நீர்—மூன்று+நீர்.

நெடுமலை (நெடுமை+மலை)—பண்புத்தொகை.

கடும்பசி (கடுமை+பசி)—பண்புத்தொகை.

பழவினை (பழமை+வினை)—பண்புத்தொகை.

அன்னை !—அண்மை விளி.

பேணினள் பெய்தலும்—முற்றெச்சம்.

தொழுதனள் உரைக்கும்—முற்றெச்சம்.

கடிநகர்—உரிச்சொற்றொடர்.

வெவ்வினை (வெம்மை+வினை)—பண்புத்தொகை.

காணிய—'செய்யிய' எனும் வாய்பாட்டு வினை யெச்சம்.

குலைப்பெண்ணை—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

கருங்கனி (கருமை+கனி)—பண்புத்தொகை.

கமழ்பொய்கை—வினைத்தொகை.

வரூஉம்—செய்யுளிசை யளபெடை

உண்கனி—வினைத்தொகை.

முதிர்கனி—வினைத்தொகை.

கனை கென (கனைக+என)—அகரம் தொக்கது விகாரம்.

உறுபசி—உரிச்சொற்றொடர்.

இளங்கொடி—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

கெடுத்தனை—முன்னிலை ஒருமை வினைமுற்று.

வாடுபசி—வினைத்தொகை.

மாமுனி—உரிச்சொற்றொடர்.

அஞ்சினன் அகன்ற—முற்றெச்சம்.

இலகொளி—வினைத்தொகை.

தீங்கனி (தீம்+கனி)—பண்புத்தொகை.

நெடுந்துயர் (நெடுமை+துயர்)—பண்புத்தொகை.

கழிபெருஞ் செல்வர்—ஒருபொருட்பன் மொழி.

ஆற்றுமக்கள்-ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

வருநாள்—வினைத்தொகை.

கண்டனன் இரங்கி—முற்றெச்சம்.

எண்ணினன் கழியும்—முற்றெச்சம்.

ஆழ்கூந்தல்—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

நெடுநிலை (நெடுமை+நிலை)—பண்புத்தொகை.

கரிகானம்—வினைத்தொகை.

மாமழை—உரிச்சொற்றொடர்.

ஆயிழை ஒதுங்கி—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வருக—வியங்கோள் வினைமுற்று.

ஒலி அரவம்—ஒருபொருட் பன்மொழி.

முதியோள் கோட்டம்—ஆறும் வேற்றுமைத்தொகை.

## (இ) பெரிய புராணம்

### 1. பெரிய புராணத்தைப் பற்றியும், சேக்கிழாரைப் பற்றியும் குறிப்பு எழுதுக.

**நூற் குறிப்பு:** பெருமை சான்ற சிவனடியார்களின் வரலாற்றைக் கூறும் நூலாகையால் இந்நூல் பெரிய புராணம் என வழங்கப்படுகிறது. இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. இது பன்னிரு திருமுறைகளுள் ஒன்ருகும்.

இது திருத்தொண்டர் திருவந்தாதி, திருத்தொண்டத் தொகை என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டது.

**ஆசிரியர் குறிப்பு:** இதன் ஆசிரியர் சேக்கிழார். ஊர் குன்றத்தூர். இயற் பெயர் அருண்மொழித் தேவர். காலம் பன்னிரண்டாம் நூற்ருண்டு.

### 2. இளையான் குடிமாறர் சிவனடியார்களை எங்ஙனம் உபசரித்தார்?

எலும்புகளை மாலையாக அணிந்த சிவபெருமானது அடியார் யாராயினும் வந்தால், உண்மையான பக்தியோடு எதிர்கொண்டழைத்து, கை குவித்து வணங்கி, முகமன் கூறி இல்லுள் அழைத்து வந்து, அவரது பாதங்களைத் தூய நீரால் கழுவி, அன்போடு இருக்கையில் எழுந்தருளச் செய்து, அருச்சனை செய்து, நால் வகையான உணவுகளையும், அறுசுவையோடு பொருந்த அவர்தம் இச்சைக் கேற்பப் படைத்து உண்ணச் செய்வார்.

### 3. வறுமை வந்தபோதும் நாயனர் அடியார்களை எங்ஙனம் போற்றினர்?

இளையான்குடி மாறனரின் செல்வம் சுருங்கினலும் உள்ளத்தால் சுருங்காமல் இருந்தார். தமது வீட்டில் உள்ள பொருள்களை விலைக்கு விற்றும், தன்னையே விற்றுக் கொடுக்கத் தக்க அளவிற்கு கடன்கள் வாங்கியும், தன்னுடைய வழக்கத்தில் மாறுபாடு இல்லாது அடியார்களுக்கு உணவளிக்கும் திருப்பணியைச் செய்து வந்தார்.

4. நாயனர் சிவனடியாராய் வந்த இறைவரை எவ்வாறு வரவேற்று உபசரித்தார்?

இளையான்குடி மாறனர் மழைக் காலத்தே ஓர் இரவில், உதவி ஏதும் கிட்டாமல் தனக்கு ஏற்பட்ட பசியைப் பொறுத்துக்கொண்டு, வீடு சேர்ந்த பின், தனது வீடு நாடி வந்துள்ள சிவபெருமானை முறையோடு எதிர்கொண் டழைத்து ஈரத்தைத் துடைக்கச் செய்து இடங்கொடுத்து அமரச் செய்தார்.

5. இளையான்குடி மாறர், அடியாராக வந்த சிவபெருமானுக்குத் திருவமுது படைத்த நிகழ்ச்சியைத் தொகுத்து இருபது வரிகளில் எழுதுக.

தம் வீடு தேடி வந்த சிவனடியாரை இளையான் குடி மாறனர் முறையோடு வரவேற்று ஈர உடம்பைத் துடைத்துக் கொள்ளச் செய்து இடம் காட்டி அமரச் செய்தார். அடியார்க்கு உணவளித்து உபசரிக்க வேண்டு மென்ற விருப்பம் மிக்கவராய்த் தனது மனைவியைத் தனியே அழைத்து, வந்திருக்கும் அடியார் மிகவும் பசித் திருப்பதால் தனக்கு உணவில்லையாயினும் வந்த சிவனடி யாருக்கு உணவளித்து உபசரிப்பது எவ்வாறு என வினவினர். மனைவியார் மாறனரை நோக்கி அயலார் யாரும் தனக்குப் பொருள் தருவாரில்லை என்றும், பொழுது போயிற்று என்றும், இனிப் போகுமிடம் வேறில்லை என்றும், தீவினை செய்தவராகிய தான் இனிச் சொல் வதற்கு என்ன விருக்கிறது என்றும் கூறி, பகலில் வயலில் விதைத்த நெல் முளைகளை வாரிக் கொண்டு வந்தால் தக்கவாறு உணவு சமைக்க முடியும் என்றும் இது தவிரத் தனக்கு வேறு வழி எதுவும் புலனுகவில்லை என்றும் கூறினள்.

மனைவியின் கூற்றைக் கேட்ட மாறனர் பெருஞ் செல்வம் பெற்ருற்போல் உள்ளத்தே மகிழ்ந்து, அன்பு கொண்டு எங்கும் நிறைந்திருந்த இருளில் வயலை நோக்கிச் சென்ருர். முளைத்திருந்த நெல்லை வாரியெடுத்து இடாவில் நிரப்பிக்கொண்டு வீட்டை நோக்கி விரைந்து சென்ருர்.

மனைவியார் வாயிலிலே காத்து நின்று மாறனார் கொண்டு வந்த நெல் முளைகளை வாங்கிச் சேற்றினைக் கழுவிய பின் அடுப்பெரிக்க விறகில்லையே என்று கூற, கூரையிலிருந்த வரிச்சுகளை இழுத்துக் கொடுத்தார். அடுப்பை மூட்டி முளைத்த நெல்லை வறுத்து அரிசியாக்கி உலையிலிட்ட பின் கறிக்கு என்ன செய்வது என வினவினார். மாறனார் தோட்டத்துள் புகுந்து முளைத்து வருகின்ற கீரைகளைப் பறித்து வந்து கொடுத்தார்.

மாறனார் சிவனடியாரைத் துயில் நீங்கச் செய்து அமுது கொள்ளுமாறு வேண்ட, சிவனடியார் ஒளிப் பிழம்பாக எழுந்து தோன்றினார். அது கண்ட மாறனாரும் அவரது மனைவியாரும் திகைத்து நிற்க, அடியாராக வந்த சிவபெருமான் அடியார்களை நோக்கி சிவனடியார்கட்கு உணவளித்தவர்கள் இருவரும் சிவலோகம் சேர்ந்து இந்திரன் ஏவல் செய்து நிற்கத் தக்க நிலையடைந்து இன்புற்றிருக்குமாறு அருள் செய்தான்.

## 6. சிவபெருமான் நாயனாருக்கு எவ்வாறு அருள் புரிந்தார் ?

சிவபெருமான் நாயனாரை விளித்து, தனது அடியவர் கட்கு உணவளித்த அவரும், அவரது மனைவியாரும் சிவலோகம் சேர்ந்து இந்திரன் குற்றேவல் செய்து நிற்கும் உயர்நிலையை அடைந்து இன்புற்றிருக்குமாறு அருள் புரிந்தார்.

## 7. பின்வரும் உவமையைப் பொருளுடன் பொருத்தி விளக்குக ?

" பாசப்பழி முதல் பறிப்பார் போல "

இளையான்குடி மாறனார் தம் கொல்லைக்குச் சென்று குழிகளில் நிரம்பி வளராத மிக்க இளம் பயிராகிய கீரை யைப் பாசத்தின் இழிந்த வேரை அடியோடு பறிப்ப வரைப்போல அடியோடு பறித்து வந்து தன் மனைவியிடம் நல்கினார்.

இங்கே பாசத்திற்கு குழி நிரம்பிவளராத மிக்க இளம் பயிராகிய கீரையும், பாசத்தின் வேரை அடியோடு பறித்த செயலுக்குக் கீரையை அடியோடு பறித்த செயலும் உவமையாகும்.

8. **இடஞ்சுட்டி விளக்குக.**

(அ) "தபோதனர் தீரவே பசித்தார் செய் வதென் ?"

**இடமும் பொழுதும் :** இறைவன் இளையான் குடி மாறனாரின் பக்தியைச் சோதிக்க எண்ணி, சிவனடியார் போன்ற உருக்கொண்டு மாறனாரின் இல்லத்தை அடைந் தார். அப்போது மாறனார் தம் மனைவியை நோக்கி,

"தபோதனர் தீரவே பசித்தார்; செய்வதென் ?" என்று வினவினார்.

**விளக்கம் :** மாறனார் தமக்கே உணவின்றி வாழ்ந்து வந்தபோது சிவனடியார் அவரில்லம் வந்துற்றார். அது கண்ட மாறனார் தம் மனைவியிடம் சிவனடியார் மிகவும் பசித் திருக்கிறார்; இப்போது அவருக்கு உணவு படைப்ப தற்கு என் செய்வது ? என்று வினவினார்.

(ஆ) "**போதும் வைகிற்று ; போமிடம் வேறிலை**"

**இடமும் பொழுதும் :** சிவனடியார் வரக் கண்ட இளையான்குடி மாறனார் அவருக்கு உணவு படைக்க என் செய்வது என்று தன் மனைவியாரொடு சூழ்ந்தார். அதற்கு அவர் தம் மனைவியார்,

"போதும் வைக்கிற்று ; போமிடம் வேறிலை" என்று கூறினார்.

**விளக்கம் :** மாறனாரின் மனைவி எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. இனி அயலாரிடத்தும் வாங்க முடியாது ; பொழுதும் மறைந்து விட்டது ; போய்க் கேட்பதற்குரிய இடமும் வேறில்லை' என்று கூறினாள்.

(இ) "வெந்தழல் அடுப்பின் மூட்ட விறகில்லை."

**இடமும் பொழுதும் :** மாறனாரும் அவர் தம் மனைவி யாரும் சிவனடியாரை உண்பிக்க ஒருப்பட்டனர். மாறனார் உணவுக்கும், கறிக்கும் வேண்டிய பொருள்களைக் கொண்டு வந்து சேர்த்தார் ; அப்போது அவர் தம் மனைவி,

"வெந்தழல் அடுப்பின் மூட்ட விறகில்லை" என்று கூறினார்.

**விளக்கம்:** மாறனாரின் மனைவி தம் கணவரிடம் உணவுப் பொருள்களைச் சமைப்பதற்கு அடுப்பில் வெம்மையான தழலை மூட்ட விறகு இல்லையே! இதற்கு என் செய்வது? என்று கூறி வருந்தினார்.

**இலக்கணக் குறிப்பு:**

1. ஒர் செல்வம்—குறுக்கல் விகாரம்
   பயன்கொள்வார்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
2. செவிப்புலம்—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
3. குலாவுபாதம்—வினைத்தொகை.
   மண்டுகாதல்—வினைத்தொகை.
   அண்டர் நாயகர்—ஆறும் வேற்றுமைத்தொகை.
4. கொள்கையர்—குறிப்பு வினையாலணையும் பெயர்.
5. மாலயன்—உம்மைத் தொகை.
   நற்றவத்தவர்—பண்புத் தொகை.
   ஞாலம் உய்ந்திட—இடவாகு பெயர்.
6. விருந்து—பண்பாகு பெயர்.
7. இன்னமுது(இனிமை + அமுது)-பண்புத் தொகை.
   தாரமாதர்—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
8. குலக்கொடி பாகர்—ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
9. காண்கிலேன்—தன்மை ஒருமை எதிர்மறை வினை முற்று.
10. மல்லல்—உரிச்சொல்.
    கொடு வந்தால்—இடைக் குறை.
11. உணமகிழ்ந்து—மூன்றும் வேற்றுமைத் தொகை.
    நீர்வயல்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை.

12. மையிருள்—உவமைத்தொகை.

13. துண்—ஒலிக் குறிப்புச் சொல்.
இருள்யாமம்—இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கத் தொகை.

14. பேரிடா (பெருமை + இடா)—பண்புத் தொகை.

15. வெண்முளை (வெண்மை + முளை)—பண்புத் தொகை.

16. வெந்தழல்(வெம்மை + தழல்)—பண்புத் தொகை.

17. இன்னடிசில் (இனிமை + அடிசில்)—பண்புத் தொகை.
செய்கோம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று.

18. குறும்பயிர் (குறுமை + பயிர்)—பண்புத் தொகை.
பறிப்பார்—வினையாலணையும் பெயர்.

19. அருள்க—வியங்கோள் வினைமுற்று.
திருமனைவி—உவமைத்தொகை.

20. இரு நிதி—உரிச் சொற்றொடர்.

## (ஈ) கம்பராமாயணம்

### கையடைப் படலம்

**1. கம்பராமாயணம்—குறிப்பு எழுதுக.**

'இராமாயணம்' என்பது இராமனது வரலாற்றைக் கூறும் நூல் எனப் பொருள்படும். கம்பரால் இயற்றப் பட்ட நூல் ஆகையால், இதற்குக்கம்பராமாயணம் என்பது பெயராயிற்று. இந்நூல், பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு பெரும் பிரிவுகளை உடையது. வால்மீகி முனிவர் வடமொழியில் எழுதிய இராமாயணத்தைத் தழுவி கம்பர் தமிழில் எழுதியதால் இது ஒரு வழி நூல் ஆகும்.

## 2. கம்பரைப் பற்றி நீவிர் அறிவன யாவை?

கம்பர், கி.பி. 9ஆம் நூற்ருண்டில் சோழ நாட்டுத் திருவழுந்தூரில் வாழ்ந்தவர். திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப்பட்டவர். கவிச் சக்கரவர்த்தி எனப் பாராட்டப்பட்டவர். 'விருத்தப்பா' பாடுவதில் ஈடும் எடுப்புமின்றி விளங்கியவர்.

## 3. தசரத மன்னன் கொலு மண்டபத்தினை அடைந்த காட்சி எங்ஙனம் புனைந்துரைக்கப் பட்டுள்ளது?

தேவர்கள் அனைவரும், இது அரும்புகள் மிகுதியாக வுடைய கற்பக மரங்கள் மிகுந்துள்ள தேவருலகில் அமைந்துள்ள அமராவதி நகரோ என்று ஐயுறும் வண் ணம் தேவலோகச் சிற்பியாகிய மயனுலும் நினைத்துப் பார்க்க முடியாத அளவிற்கு வேலைப்பாடுடையதும், வானத்தை அளாவியதும், மணிகளால் அலங்கரிக்கப் பெற்றதுமான அழகிய மண்டபத்தின்கண் தசரதன் அழகுபெற நுழைந்தான்.

## 4. விசுவாமித்திரரின் பெருமையைக் குறிப்பிடுக.

விசுவாமித்திரர் "சீவராசிகள் அனைத்தையும், அவை கள் அடங்கிய அனைத்து உலகங்களையும் வேறே தனித் தனியாகப் படைத்து, தேவர்களையும், பிரமனையும் இப் போதே படைப்பேன்" என்று ஒரு காலத்தில் படைக்கத் தொடங்கிய பெருமை உடையவர்.

## 5 தசரதன் விசுவாமித்திரரை எங்ஙனம் வர வேற்று முகமன் கூறினன்?

விசுவாமித்திரனது வருகையைக் கண்ட தசரதன் மார்பில் அணிந்துள்ள மணிமாலை சூரியனைக் காட்டிலும் ஒளிமிகுந்து வீச, பிரமனது வருகை கண்ட இந்திரன் போல விரைந்து எழுந்து அவரது பாதங்களில் வணங் கினன். தசரதன் முனிவரைப் பணிந்து அவரது வருகை யானது உலகம் செய்த தவத்தாலோ, தனது தவத்தாலோ நிகழ்ந்தது அன்று என்றும், தனது முன்னேர் செய்த தவத்தால்தான் நிகழ்ந்தது என்றும் இனிமையாகக் கூறினன்.

**6. விசுவாமித்திரன் அரசனை எவ்வாறு பாராட்டினான் ?**

விசுவாமித்திரன் தசரதனை நோக்கித் தன்னைப்போன்ற முனிவர்களும், தேவர்களும் தமக்கு இடையூறு ஏற்பட்டால் பல மலைகளையும் பார்த்து நகைக்கின்ற பனிமலையாகிய கைலாயத்தையும், திருமால் பள்ளி கொண்டுள்ள திருப்பாற் கடலையும், தாமரை மலராகிய ஆசனம் அமைந்த பிரமதேவனது உலகத்தையும், தேவேந்திரனது அமராவதி நகரையும், மணி மாடங்கள் அமைந்த அயோத்தியையும் தவிர வேறு எந்த இடத்தைப் புகலாக அடைய முடியும் என வினவினான். மேலும் தளிர்கள் மிகுந்து தேன் துளிக்கும் கற்பக மர நிழலில் அமர்ந்திருக்கும் தன்மையிழந்து இந்திரன் தசரதனது குடை நிழலில் ஒதுங்கி யாசித்து நிற்க அத்தசரதன் குன்றனைய மணித் தோள்களையுடைய சம்பரனைக் குலத்தோடு ஒழித்துப் பெற்று அளித்த நாடல்லவா இந்திரன் ஆண்டு வரும் தேவலோகம் என்று வினவினர். இவ்வாறாக விசுவாமித்திரன் தசரதனைப் புகழ்ந்து கூறினான்.

**7. கொடுங்கூற்றின் உளையச் சொன்னான் யார் ? சொல்லியது யாது ?**

கொடுங்கூற்றின் உளையச் சொன்னவன் விசுவாமித்திரன். விசுவாமித்திரன் தசரதனை நோக்கி எல்லாப் பயன்களையும் தருகின்ற சித்தவனத்துள் தாம் செய்யப் போகும் வேள்வியில், தவஞ்செய்வோர் அஞ்ச அவர்களிடம் சேரும் காமம், வெகுளி போல அரக்கர்கள் இடையே புகுந்து வேள்வியைக் கெடுக்காதவாறு காக்க அவனது நான்கு புதல்வர்களில் ஒருவனாகிய இராமனைத் தன்னுடன் அனுப்புமாறு உயிரைப் பெற நிற்கும் எமன் போலத் தசரதனது மனம் வருந்த வேண்டினான்.

**8. 'தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்றடை காம வெகுளி என'–இவ்வுவமையை உவமேயத்துடன் பொருத்திக் காட்டுக.**

தவ வேள்விக்கு இடையூறாய் நிருதர் இடை விலக்கலுக்கு தவஞ் செய்வோர்கள் வெருவரக்காமம் சென்றடைதல் உவமையாயிற்று.

**விளக்கம் :** விசுவாமித்திரன் தான் சித்தவனத்தில் செய்யப்போகும் யாகத்துக்கு தவஞ் செய்கின்றவர்களது தவத்தைக் குலைக்க வரும் ஆசை, கோபம் போல இடையூறு செய்ய வரும் அரக்கர்களை விலக்கவேண்டும் எனக் கூறுகிறார். காமமும் வெளியும் அரக்கர்க்கும், அரக்கர்கள் வேள்வியைக் கெடுக்கவரும் செயலுக்கு காமம், வெகுளி தவஞ் செய்பவர்களது தவத்தைக் கெடுத்தலாகிய செயலும் உவமையாயின.

**9. விசுவாமித்திரர் கூறியதைக் கேட்ட மன்னன் மன நிலையை கம்பர் எங்ஙனம் எடுத்துக் கூறி யுள்ளார் ?**

பெருந்தவத்தோனாகிய விசுவாமித்திரன் இராமனைத் தன்னோடு அனுப்புமாறு வேண்டிய அளவில் தசரத மன்னன் உயிர்நிலையில் வேல் நுழைந்ததால் உண்டான புண்ணில் நெருப்பு நுழைந்ததுபோல் செவியிற்புக, உள்ளே மிகுந்து எழுந்த துயரமானது உந்த, அரிய உயிரானது உள்ளும் வெளியுமாக ஊசலாட பிறவிக் குருடன் ஒருவன் இடையே கண்ணைப் பெற்று மீண்டும் இழந்தாற்போல மிகவும் வருந்தினான்.

**10 தசரதன் விசுவாமித்திரர்க்குக் கூறிய மறுமொழி யாது ?**

தசரதன் விசுவாமித்திரரை நோக்கி இராமன் இளையவன் என்றும், படைத் தேர்ச்சி இல்லாதவன் என்றும் கூறி, செய்யவேண்டிய பணி யாகத்தைக் காப்ப தாயின் சிவபெருமானும், பிரம்மாவும், தேவேந்திரனும் சேர்ந்து யாகத்திற்கு இடையூறு செய்வதானாலும் அவ் விடையூற்றுக்கு இடையூறு செய்து தான் காப்பதாகக் கூறினான்.

**11. விசுவாமித்திரர் கொண்ட சினத்தை விளக்குக.**

விசுவாமித்திர முனிவன் இருக்கையை விட்டெழுந் தான். முனிவரின் மேல் நோக்கி ஏறிய புருவங்கள் நெற்றி முழுதும் பரந்தன ; வெகுளிச் சிரிப்பும் மிக வுண்டாயிற்று. கண்கள் சிவப்பேறின. சினத் தீயின் புகையால் மேலே உள்ள சூரியன் மறைந்து திசைகள்

இருளடைந்தன. எவ்வுலகத்தும் உள்ள நிலைத்திணைப் பொருள்களும் சுழன்றன. இத்தகைய மாறுதல்களைத் தேவர்கள் கண்டு யுகாந்த முடிவுக் காலம் ஆகிவிடுமோ என ஐயங் கொண்டனர்.

**12. வசிட்டர் தசரதனுக்கு எவ்வாறு அறிவுரை கூறினர் ?**

வசிட்டன் கடுஞ்சினங் கொண்ட விசுவாமித்திரனை நோக்கிப் பொறுத்தருளுமாறு வேண்டி, தசரதனை நோக்கி அவனது மைந்தனுக்குப் பிறரால் உண்டாக்க முடியாத நன்மைகள் தாமாகவே வந்து சேரும் அந்நாளில் மறுக்கலாகுமோ என வினவி, பெய்யும் மழையினல் பெருகும் வெள்ளமானது விரைந்து சென்று கடலிற் கலப்பதுபோல் இராமனுக்கு அளவில்லாத வித்தைகள் வந்து சேர்கின்ற காலம் வலிய வந்துள்ளது என்று கூறினன்.

**13. இராம இலக்குமணரை தசரதன் விசுவாமித் திரரிடம் கையடை தந்து கூறியது யாது ?**

தசரதன் இராம இலக்குவனை விசுவாமித்திரரிடம் காட்டி அவர்களை அவர்க்குத் தருவதாகவும் அவர்கட்குத் தாயும் தந்தையுமாக இருந்து அவர்களைப் பேணுதல் அவர் தம் பொறுப்பு என்றும் கூறினன்.

**14. இராம இலக்குமணர் முனிவரைத் தொடர்ந்து சென்றமை எவ்வாறு புனைந்துரைக்கப் படுகிறது ?**

இராமனும் இலக்குவனும் தம் தந்தையாகிய தசரதனது உயிர் பிரிந்து செல்வதுபோல, தவஞ் செய்வதாகக் கூறிய விசுவாமித்திர முனிவன் பின்னல் அவனது நிழல் போல அயோத்தி மாநகரத்தின் பொன்மயமான மதிலைக் கடந்து சென்றனர்.

**15. இடஞ்சுட்டி விளக்குக.**

(அ) ‘நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி’

**இடமும் பொழுதும்:** விசுவாமித்திரன் தனது யாகத்திற்காக இராமனை அழைத்துச் செல்ல வந்தபோது, தசரதனை நோக்கி 'நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி, எனக் கூறினன்.

**விளக்கம்:** "உனது புதல்வர்களிலே கரியவனாகிய ஒப்பற்ற இராமனை என்னுடன் அனுப்புவாயாக" என்று வேண்டினன்.

(ஆ) "படையூற்றமிலன்சிறியன் இவன்"

**இடமும் பொழுதும்:** இது தசரதனின் கூற்று. விசுவாமித்திரன் இராமனைத் தன்னுடன் யாகத்திற்குத் துணைபுரிய அனுப்புமாறு வேண்டியபோது தசரதன் அவனை நோக்கிக் கூறியது.

**விளக்கம்:** இராமன் போதிய படைத்தேர்ச்சி இல்லாதவன், மேலும் இளையவன்; எனவே, விசுவாமித்திரனது யாகத்திற்குத் துணை நிற்கும் தகுதி இல்லாதவன் என்று விசுவாமித்திரரிடம் தசரதன் கூறினன்.

(இ) 'நீ பொறுத்தி'

**இடமும் பொழுதும்:** இது வசிட்ட முனிவரது கூற்று. தசரதன் இராமனை அனுப்ப இயலாமையைக் குறித்த போது வெகுண்டெழுந்த விசுவாமித்திரனை நோக்கி வசிட்டர் கூறியது.

**விளக்கம்:** வசிட்டன் சினந்தெழுந்த விசுவாமித்திரனை நோக்கி அவனைப் பொறுத்தருளுமாறு வேண்டினன்.

(ஈ) 'நற்றந்தை நீ தனித்தாயும் நீயிவர்க்கு'

**இடமும் பொழுதும்:** தசரதன் இராம இலக்குவனை விசுவாமித்திர முனிவனிடம் ஒப்புவித்தபோது அவனை நோக்கிக் கூறியது.

**விளக்கம்:** தசரதன் விசுவாமித்திரனை நோக்கித் தனது மைந்தர்கட்குத் தந்தையும் தாயும் விசுவாமித்திரனே என்று கூறினன்.

**இலக்கணக் குறிப்பு :**

1. நன்னகர் (நன்மை + நகர்)—பண்புத் தொகை.
2. படைப்பன்—தன்மை வினைமுற்று.
3. அந்தரத்தலம்—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
4. செய்தவம்—வினைத்தொகை.
   கூறும்—செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்று.
5. ஊறு—முதனிலை திரிந்த தொழிற் பெயர்.
6. இன்றளிர் (இனிமை+தளிர்)—பண்புத் தொகை.
7. உவகைக் கடல்—உருவகம்.
   அருளுக—வியங்கோள் வினைமுற்று.
8. இடையூரு—தொகுத்தல் விகாரம்.
   காத்தி—ஏவல் ஒருமை வினைமுற்று.
   இச்செய்யுளில் உவமையணி யமைந்துள்ளது.
9. எண்ணிலா—இடைக்குறை
   எறிவேல்—வினைத்தொகை.
   பெரும்புழை (பெருமை + புழை)— பண்புத் தொகை.
   ஆருயிர் (அருமை+உயிர்)—பண்புத் தொகை.
10. நீர்க்கங்கை—இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கத் தொகை.
    எழுக—வியங்கோள் வினைமுற்று.
    காப்பென்—தன்மை ஒருமை வினைமுற்று.
    பெருவேள்வி (பெருமை + வேள்வி)—பண்புத் தொகை.
12. மாமுனி—உரிச் சொற்றொடர்.
    பொறுத்தி—ஏவல் ஒருமை வினைமுற்று.
13. பெருகுவெள்ளம்—வினைத்தொகை.
    ஐய—அண்மை விளி.

14. கொணர்மின்—ஏவற்பன்மை வினைமுற்று.
வருக—வியங்கோள் வினைமுற்று.

15. எந்தை—எம் + தந்தை என்பதன் மரூஉ.
தந்தனன்—தன்மை ஒருமை வினைமுற்று.
செய்கென்றான்—அகரம் தொக்கது விகாரம்.

16. முடித்தும்—தன்மைப் பன்மை வினைமுற்று.

17. இன்னுயிர் (இனிமை + உயிர்)—பண்புத்தொகை.
மாநகர், மாதவன் } உரிச் சொற்றொடர்கள்.

## (உ) இரட்சணிய யாத்திரிகம்

### இரட்சணிய சரிதப் படலம்

### சிலுவைப்பாடு

**1. இரட்சணிய யாத்திரிகம்—இந்நூலாசிரியர் குறிப்பும், நூற்குறிப்பும் தருக.**

**நூல்:** இஃது ஆத்தும ஈடேற்றத்தை விரும்பியவர் மேற்கொண்ட யாத்திரையை விளக்கும் நூலாகும். தமிழ் மொழியில் அமைந்த கிறித்துவப் பெருங்காப்பியம். 'ஜான் பன்யன்' என்ற ஆங்கிலக் கவிஞர் இயற்றிய 'பில்கிரிம்ஸ் பிராகிரஸ்' என்னும் நூலைத் தழுவி இயற்றப்பட்ட வழி நூலாகும்.

**ஆசிரியர்:** இதன் ஆசிரியர் எச். ஏ. கிருட்டினப் பிள்ளை என்பார். இவரது ஊர் இரட்டியாப்பட்டி என்பதாகும். பெற்றோர் சங்கரநாராயணப் பிள்ளை, தெய்வ நாயகியம்மாள் என்பார். ஹென்றி ஆல்பர்ட்டு கிருட்டினப் பிள்ளை என்பது இவரது முழுப்பெயர். காலம் கி.பி. 1827—1900.

**2. இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து வருவதைக் கண்ட நகரினர் வருந்திக் கூறியன யாவை?**

பெண்களுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்ட கற்புடைய மரியன்னையின் திருமகனுக்கா! இக்கதி வாய்த்ததென்று பெண்களெல்லாரும் ஒன்ருய்க் கூடி ஆரு மனவேதனை யுடன் வாய்விட்டழுது கொண்டு வீதியின் இருபக்கமும் வந்து கூடினர்கள்.

சிலர் சிவந்த தாமரை மலர்போல் ஒளிவீசும் அவர் திருமுகம் வாடி அழகு குறைந்து போனது என்ன பரிதாபம் என்பர். சிலர் அழியாக் கருணை என்னும் தேன் சொட்டும் மலரை ஒத்த கண்கள் மனக்கவலை நிறைந்தனவாய் ஒளியற்றுப் போயிற்றே என்பர்.

பெண்களெல்லாம் அழுது ஆரவாரம் செய்ய, பிள்ளைகள் கதற, அதைக் கண்டவர்களும் கேட்டவர்களும் இரங்கி மனம் கரைந்துருகி தடுமாற்றமுற்று, நிறைந்த துக்கமென்னும் நெருப்பினல் வயிறெரிய, முற்காலத்தில் காவலையுடைய சோதோம் பட்டணம் எரிந்து விழுந்தது போல எருசலம் பட்டணமும் பதைத்துத் துயரில் ஆழ்ந்தது.

இவையே இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து வருவதைக் கண்ட நகரினர் வருந்திக் கூறியனவாம்.

**3. இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து சென்ற போது எருசலம் நகரத்தாரும், மரியன்னையும் அடைந்த வருத்தத்தை ஆசிரியர் எவ்வாறு கூறுகின்ருர்?**

இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து சென்றபோது எருசலம் நகரத்தாரும் மரியன்னையும் அடைந்த வருத்தத்தை ஆசிரியர் கூறுமாறு :—

நெசவுக் குழலில் பொருந்திய நூலைப் போன்று பிரியாத குருபக்தி நிறைந்த சீடர்கள் நெருப்புப் போன்ற துக்கத்தால் மெலிந்து மறைவாக அக்கூட்டத்துடன் செல்ல, குற்றமற்ற பரம்பொருளாகிய கடவுளைத் தன் திருக்குமரனகக் கொண்ட இளம் பெண்ணுகிய மரியன்னையும் தீயிலிட்ட மலர் மாலையைப்போல் வாடி உயிர்தளர்ந்து (நம் பகவனுக்குப்) பின்னல் சென்ருள்.

**4, இயேசுவைக் கொலைஞர் குருசில் அறைந்ததைப் பற்றியும், அப்போது அவர் இறைவனை வேண்டிக் கூறியதையும் விளக்குக.**

கொலைக்களத்தில் இயேசுவோடு கொலைக் குற்றம் சாட்டப்பட்டுக் கொண்டுவந்த வேறு இரண்டு திருடர்களையும் அவரது வலப் பக்கம் ஒருவனையும் இடப் பக்கம் ஒருவனையுமாக கோபத்தோடு சிலுவையில் அறைந்தபின் அக்கொலையாளிகளது வேலை முடிய, முற் கூறிய வேத வாக்கியங்கள் பலிக்க, அவ்வேதத்திற்கு ஆதாரமான கடவுள் குற்றவாளிகளின் நடுவில் சிலுவையில் தொங்கினர்.

அருமையான திருமேனி நைந்து தவித்துப் போய்ச் சொல்ல முடியாத பல பாடுகள் படுகின்ற நேரத்திலும், அருள் நாதனகிய எம்பெருமான் "என் பிதாவே! இவர்கள் தாம் செய்வதை இன்னதென்று அறியமாட்டார் கள். ஆகையால் இவர்களது குற்றத்தை மன்னித்தருள்க" என்று அன்புடன் தம் அழகிய கனிபோன்ற வாயைத் திறந்து இறைவனை வேண்டிக் கொண்டனர்.

**5. நிகழிடமும் பொழுதும் கூறி விளக்குக.**

(அ) "நந்தாக் கருணை நருத்துளிக்கும் கண்மலர்கள்
சிந்தாகுலம் பொதிந்து தேசிழந்து விட்டது"

**இடமும் பொழுதும்:** கொலைஞர்கள் இயேசுபிரானைச் சிலுவையில் அறைவதற்காகக் கொலைக் களம் நோக்கிக் கொண்டு சென்றனர். அதைக் கண்ட எருசலேம் நகர மக்கள் பலவாறு புலம்பிக் கூறும்போது,

"நந்தாக்கருணை.....................................
.....................................விட்டது"

என்று கூறினர்.

**விளக்கம்:** நகர மாந்தர் சிலர் அழியாத கருணை என்னும் தேனைச் சொட்டும் மலரை ஒத்த கண்கள் மனக் கவலை நிறைந்தனவாய் ஒளியற்றுப் போயின என்றும் கூறினர்.

(இ) " இன்ன தெனவறி கில்லார்தாம் செய்வ
திவர் பிழையை மன்னியும் "

இடமும் பொழுதும்: கொலைஞர்கள் இயேசு பெருமானைச் சிலுவையில் அறைந்தார்கள். அப்போதும் நம் பெருமான் இறைவனை நோக்கி 'இறைவா! இன்ன தென வறிகிலார் தாம் செய்வ திவர் பிழையை மன்னியும்' என்று இறைவனை நோக்கி வேண்டினர்.

**விளக்கம்:** தமது அரிய திருமேனி நைந்து பலவாருகத் துன்பப் படும்போதும் அருள்நாதனுகிய இயேசுபிரான் "என் பிதாவே! இவர்கள் தாம் செய்வதை இன்னதென்று அறியமாட்டார்கள். ஆகவே இவர்களது குற்றத்தை மன்னித் தருளும்' என்று அன்புடன் வேண்டினர்.

6. உவமைகளை **விளக்கிப்** பொருளொடு பொருத்துக.

(1) 'குழல் நூலின்'

**உவமைவிளக்கம்:** நெசவுக் குழலைவிட்டுப் பிரியாத நூலைப்போல என்பது பொருளாகும்.

பொருளொடு பொருத்தல்: எவ்வாறு நெசவுக் குழலை விட்டு நூலைப் பிரிக்க இயலாதோ அதுபோல குருபக்தி என்ற பண்பை விட்டுப் பிரிக்க இயலாத சீடர்கள் என்பது பொருள். இங்கு குழல் (நெசவுக் குழல்) சீடர்களுக்கும், அதை விட்டுப் பிரிக்க இயலாத நூல் அவர்களை விட்டுப் பிரிக்க இயலாத குருபக்தி என்ற பண்பிற்கும் உவமைகளாகக் கூறப்பட்டன.

(2) 'தழலிடு பூங்கொடியேபோல்.'

**உவமை விளக்கம்:** நெருப்பிலே் இட்ட மலர் மாலையைப் போல என்பது பொருளாகும்.

பொருளோடு பொருத்துதல்: தீயிலே இடப்பட்ட மலர் மாலை எவ்வாறு கருகி அழியுமோ அதுபோல மரியன்னையும் வாடி உயிர் தளர்ந்தாள் என்பது பொருளாகும். இங்கு மலர் மாலை மரியன்னைக்கும், தீ அவளது துயரத்திற்கும், மாலை கருகி அழிதல் மரியன்னை வாடி உயிர் தளர்தலுக்கும் உவமைகளாயின.

**இலக்கணக் குறிப்பு :**

போர்ச் சேவகர்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை.

செவ்வங்கி (செம்மை+அங்கி)—பண்புத்தொகை.

தேவர்பிரான்—ஆறும் வேற்றுமைத்தொகை.

கொடுபோனுர்—இடைக் குறை.

கய்யயர்ந்து—'கய்' கைக்குப் போலி.

அய்யன்—'ஐ' காரத்துக்கு அகரம் போலி.

மெல்லியலார் (மென்மை+இயலார்)—பண்புத் தொகை.

செந்தாமரை (செம்மை+தாமரை)- பண்புத்தொகை.

நந்தா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

கருணை நரு—உருவகம்.

கண் மலர்—உருவகம்.

கடிநகரம்—உரிச் சொற்றெடர்.

குழல்நூல்—ஏழாம் வேற்றுமையுருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

அருட்சீடர்—அருளால் நிறைந்த சீடர்—மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை.

மகவாக் கொள்—ஆக என்பதன் தொகுத்தல் விகாரம்

**பசுந்தோகை** சாம்பி—பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வதைபுரிவான்—வானீற்றுப் பெயரெச்சம்.

குருசேற்றி
நடுநின்றுர் } ஏழாம் வேற்றுமைத்தொகைகள்.

எந்தாய்—என் தந்தையே என்பதன் மரூஉ.

அருள்வள்ளல்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

# (ஊ). சீருப்புராணம்

## கபுகாபுப்படலம்

### 1. சீருப்புராணம்—குறிப்பு எழுதுக.

'சீரத்து' என்பது அரபுச் சொல். இது தமிழில் 'சீரு' என வழங்கும். இதற்குப் 'புகழ்' என்பது பொருள். நபிநாயகத்தின் புகழ்மிக்க வரலாற்றை விரித்துரைக்கும் நூலாதலின் இஃது இப்பெயர் பெற்றது.

### 2. உமறுப்புலவரைப் பற்றிக் குறிப்பு எழுதுக.

இந்நூலை இயற்றியவர் உமறுப்புலவர். இவர் முகவை மாவட்டத்தில் கீழைக்கரையை அடுத்த ஒரு சிற்றூரில் பிறந்தார். இவர் தந்தையார் சேகு முதலியார். இவரது ஆசிரியர் கடிகை முத்துப் புலவர். காலம் கி.பி. 16ஆம் நூற்றுண்டு. இவர் எட்டையபுர மன்னரது அவைக்களப் புலவராய் விளங்கினர்.

### 3. நூல்கள் வைக்கப்பட்டிருந்த பெட்டியில் கபுகாபு எதைக் கண்டு திகைத்தான்?

நூல்கள் வைக்கப்பட்டிருந்த பெட்டியின் அறையில் மின்னலைப் போன்று ஒளி வீசும் முத்திரையிடப்பட்ட பொற்செப்பு ஒன்றைக் கண்டு கபுகாபு திகைத்தான்.

### 4. பொற்செப்பைக் குறித்துக் கேட்ட மைந்தனுக்குத் தந்தை கூறிய மறுமொழி யாது?

தந்தை தன் மகனை அழைத்து, பிற்காலத்தே தம் சமயத்தை மறுத்து, பொய்யும் வஞ்சனையும் சேர்த்து 'தீன்' என்னும் சமயத்தைத் தோற்றுவிப்பவன் ஒருவன் தோன்றுவான். அவனது நெறியால் மக்களுள் பகைமை தோன்றும் எனப் பெரியோர் கூறி, அவனுடைய பெயரும், அடையாளமும் அதில் குறித்து வைத்துள்ளனர். அச்செப்பினது பொன் முத்திரையை அவன் தொட வேண்டாம் என்றும் மறுமொழி கூறினர்.

**5. பொற்செப்பைத் திறந்த கபுகாபு கண்ட பொருளைக் குறித்தும் அவன் அடைந்த நிலையைக் குறித்தும் ஆசிரியர் கூறுவன யாவை?**

பேழையைத் திறந்த கபுகாபு அதனுள் இருந்த தாளில் முகமது நபியினது திருத்தமான பெயரும் சிறப்பும் எழுதப்பட்டிருப்பதைக் கண்டான். அது போழ்து மற்றெவர்க்கும் தெரியாத பேரொளி ஒன்று அவன் கண்களுக்கு மட்டும் புலனாயிற்று. அவனது தாய் ஏன் அவன் அவ்வாறு புலம்புகிறான் என்று கவலைப்படும் அளவிற்கு மீண்டும் மீண்டும் முகமதுவினுடைய திருப் பெயரைக் கூறிக்கொண்டே நின்றான்.

**6. 'உனக்குறும் வரலாறு என்னொடு உரை' என்று கேட்ட தந்தைக்குக் கபுகாபு கூறிய உரை யாது?**

கபுகாபுவிற்கு யாது நேர்ந்தது என அவனது தந்தை யார் வினவினார். அதற்குக் கபுகாபு தன் தந்தையாரை நோக்கி, பொன்னும், பொருளும் கொடுத்தல் அனைவருக் கும் பொதுவாகும் என்றும், உலகத்தையே வாழ வைக்கும் தெய்வத் திருப்பெயர் ஒன்றை இங்ஙனம் மறைப்பது தகுமோ? என்றும், இது கல்லார்க்கும் இழிவாகும் என்றும், தாம் பெற்ற மைந்தர்க்கு வேண்டிய அறிவும், அறமும், வேதமும், கலையும் கற்பித்தல் தந்தையின் கடமை என்றும், அவற்றை மறைப்பது பெற்றோர் கடனன்று என்றும் கூறினான்.

**7. இடஞ்சுட்டி விளக்குக.**

(அ) 'பொன்னின் முத்திரை நீ தீண்டல் அன்று'

**இடமும் பொழுதும்:** சீறாப் புராணத்தில் கபுகாபு தன் தந்தையின் பெட்டியில் முத்திரையிட்ட பொற் செப்பு ஒன்றைக் கண்டு திகைத்தான். தன் ஐயத்தை நீக்கத் தந்தையிடம் சென்று பெட்டியிலிருப்பது யாது? என வினவினான். அது கேட்ட தந்தை 'பொன்னின் முத்திரை நீ தீண்டல் அன்று' என விடை பகர்ந்தார்.

**விளக்கம் :** கபுகாபுவின் தந்தை அச்செப்பினது பொன் முத்திரையை அவன் தொடவேண்டாம் என்று கூறினர்.

(ஆ) "ஒருதிரு மொழியால் வாழு
முலகென்று லதனைத் தோன்று
திருள்பட மறைத்தல் கல்லாப்
புல்லர்க்கு மிழிவ தாமால்."

**இடமும் பொழுதும் :** தந்தையார் பொன் முத்திரையிட்ட செப்பைத் தொடவேண்டாம் என்று கூறியும் கபுகாபு பொன் முத்திரையை விலக்கி அதனுள் இருந்த ஒரு தாளினைப் படித்துப் பரவசமடைந்தான். அப்போது 'மகமதுவே, மகமதுவே' எனக் கூறக் கேட்ட தந்தையார், அவனுக்கு யாது நேர்ந்தது என வினவினர். அது கேட்ட கபுகாபு "ஒருதிரு...................தாமால்" என்று கூறினன்.

**விளக்கம் :** உலகத்தையே வாழ வைக்கும் தெய்வத் திருப்பெயரொன்றை இங்ஙனம் மறைப்பது தகுமோ இது கல்லார்க்கும் இழிவாகும் என்று கூறினன்.

**இலக்கணக் குறிப்பு :**

1. எந்தை (எம்+தந்தை)—மருஉ.
   புந்தி—புத்தி என்பதன் மெலித்தல் விகாரம்.
   நந்தல்—நத்தல் என்பதன் வலித்தல் விகாரம்.
2. தெருள்வன்—தன்மை ஒருமை வினைமுற்று.
4. பொற்பேழை—பொன்னலாகிய பேழை. மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை.
   காய்கதிரவன்—வினைத்தொகை.
7. வாசித்தனன்—தன்மை ஒருமை வினைமுற்று.
8. பேராசை (பெருமை+ஆசை)—பண்புத் தொகை.
9. கல்லாப் புல்லர்—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
10. காதலிற் பயந்த—வேற்றுமை மயக்கம்.

# (எ). பாரத வெண்பா

## உத்தியோக பருவம்

### கன்னனும் குந்தியும்

**1. பாரத வெண்பா—நூற்குறிப்பும் ஆசிரியர் குறிப்பும் எழுதுக.**

**பாரதவெண்பா:** பரதன் வழியில் தோன்றியவர் களின் வரலாற்றை வெண்பாவாற் கூறும் நூலாகையால், இதற்குப் பாரத வெண்பா என்பது பெயராயிற்று. முதல் நூல் வேதவியாசர் வடமொழியில் இயற்றிய பாரதம். வழி நூல் பாரத வெண்பா.

**பெருந்தேவனுர்:** சங்ககாலத்தை அடுத்து வாழ்ந்த பெருந்தேவனுர் என்பவர் பாரதத்தை ஆசிரியப்பாவால் இயற்றினுர். அந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. பின்னர் கி.பி. 9ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த பெருந் தேவனுர் இதனை வெண்பாவால் இயற்றினுர். இவருக்குப் பின்னர் வில்லிபுத்தூரார், நல்லாப்பிள்ளை ஆகியோர் விருத்தப்பாக்களால் பாரதத்தை இயற்றினர்.

**2. கன்னன் குந்தியை வரவேற்றுக் கூறியது யாது ?**

ஒளிமிக்க வேலையுடைய கன்னன், குந்திதேவியை வரவேற்று, அவளது சிறந்த அடிகள் நோகும் படித்தன்னை வந்தடைந்த காரணத்தைத் தனக்குக் கூறும்படி வேண்டினுன்.

**3. குந்தி கன்னனுக்குத் தன்னை எவ்வாறு அறிமுகப் படுத்திக் கொண்டாள் ?**

பால்போன்ற இன்சொல் கூறும் குந்தி சூரியன் வாயிலாகத் தனக்குப் பிறந்த புதல்வனே கன்னன் என்னும் உண்மையை அன்போடு எடுத்துக் கூறித் தன்னை அறிமுகம் செய்து கொண்டாள்.

**4. தான் கன்னனை ஈன்ற தாயே என்பதைக் குந்தி எங்ஙனம் புலப்படுத்தினாள்?**

கன்னன் தனக்குத் தாய் என்று வந்தவர்கள் எல்லாம் தன்பால் இருந்த ஆடையை உடுத்து எலும்பாயினர் எனக் கூறினான். குந்தி அந்த ஆடையை வாங்கி உடுத்தினள். அவள் மற்ற பெண்களைப்போல் எலும்பாகவில்லை. அதன் வாயிலாக தான் கன்னனை ஈன்ற தாய் என்பதைப் புலப்படுத்தினாள்.

**5. தன்னைத் தாய் என அறிந்து வணங்கிய கன்னனிடம் குந்தி கூறியது யாது?**

குந்தி கன்னனை நோக்கி அனைத்து உலகங்களையும் காத்து, அரசர்கள் எல்லாம் வந்து வணங்க, கண்கள் மகிழ்ச்சியடைய பொற்றேரில் ஏறிவந்து, பஞ்ச பாண்டவர் ஐவரையும், ஏவலாளராகக் கொள்ளும்படி அவனிடம் கோரினாள்.

**6. கன்னன் செய்ந்நன்றி மறவாதவன் என்பதை எதனால் அறியலாம்?**

கன்னன் தனது தாய் குந்தி தேவியை நோக்கித் தான் யாரென்றே அறியாமல் தனக்கு முடிசூட்டிப் பலசிற்றரசர்கள் வணங்க அரசனாக்கிய பிறகு, அவனது எச்சிலையே உண்ணாத சிறப்பு வாய்ந்த துரியோதனன் தனது எச்சிலை தன்னோடு இனிமையாக உண்டான் என்றும்,

அத்துரியோதனன் தனக்குச் 'செய்த உதவிகளை உலகம் நன்கு அறியும் என்றும் கூறி செய்ந்நன்றி மறத்தல் நல்லவர்க்கு அழகாகுமா? என்று வினவினான்.

துரியோதனனது மனைவியின் துகிலைத் தான் பிடித்து இழுத்தபோது அறுந்து விழுந்த மணிகளைக் கண்டுதான் எடுக்கவோ? கோர்க்கவோ? என்று கேட்ட துரியோதனனுக்காகப் போர்செய்து தனது உயிரைப் போக்க மாட்டேனோ? என்றும் வினவினான்.

இவற்றிலிருந்து கன்னனது செய்ந்நன்றி மறவாச் சிறப்பை அறியலாம்.

7. **குந்தி கன்னனிடம்வேண்டிய வரங்கள் யாவை? கன்னன் கூறிய மறுமொழி யாது?**

குந்திதேவி தனது மகனுகிய கன்னனை மார்புறத் தழுவிக்கொண்டு பாம்புக்கணையை அர்ச்சுனன் மேல் ஒரு முறைக்கு மேல் பயன் படுத்தக் கூடாது என்று கேட்டுக் கொண்டாள்.

கன்னன் அவ்வாறே ஒருமுறைக்குமேல் பாம்புக் கணையைப் பயன்படுத்துவதில்லை என்று கூறினுன்.

அர்ச்சுனனை அல்லாது மற்றைய தம்பிமார்களுடன் போர் செய்து அவர்களைக் கொல்லலாகாது என்று இரண் டாவது வரம் வேண்டினுள்.

அதற்குக் கன்னன் தான் மறுத்துக் கூறினல் 'பெற்ற தாய் கேட்ட வரத்தையே கன்னன் அளிக்க மறுத்தான்' என்னும் பழி உலகத்தில் அழியாது நிலைத்து நிற்கும் என்று கூறி அவள் கேட்ட வரத்தை நல்கினுன்.

8. **கன்னன் குந்தியிடம் வேண்டிய வரம் யாது?**

கன்னன் குந்திதேவியை நோக்கித் தான் போரில் இறக்க நேர்ந்தால் குந்திதேவியே தனது தாய் என்பதை உலகறியச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொணடான்.

மேலும் அவள் அவளுடைய மற்றைய பிள்ளைகளிடத் தில் கன்னன் தனது மகன் என்று கூறினல் அவர்கள் அவர்கட்குரிய அரசுரிமையைத் தனக்கு அளிப்பார்கள் என்றும், அதனைத்தான் தனது தோழனுன துரியோதன னுக்குக் கொடுக்க நேரிடும் என்றும், அதனுல் பாண்டவர் களுக்கு அரசுரிமைகிட்டாது என்றும் கூறி அதனுல் போர் நிகழும் முன்னர் பாண்டவர்களிடத்தில் உண்மையைக் கூற வேண்டாம் என்று கேட்டுக் கொண்டான்.

9. **இடஞ்சுட்டி விளக்குக.**

(அ) "தாயே படாம் போர்க்கின் மற்றென்னைப்
பெற்றெடுத்த தாயே"

**இடமும் பொழுதும்:** குந்தி கன்னனை அடைந்து அவனது பிறப்பைப்பற்றிய உண்மையைக் கூறினாள். அப்போது கன்னன் " தாயே படாம்.................தாயே ". எனக் கூறினான்.

**விளக்கம்:** குந்தி, தான் கன்னனது தாய் என்று கூறக்கேட்ட கன்னன் குந்தியை நோக்கித் தன்னிடமுள்ள ஆடையை உடுத்துக் கொண்ட பின்னும் உயிருடன் இருந்தால் அவள்தான் தனது தாய் என்று கூறினான்.

(ஆ) " மற்றவற்றைக் கோக்கேனோ வென்றுரைத்த
கொற்றவற் கெனுருயிரைப் போக்கேனோ
வெஞ்சமத்துப் புக்கு ?"

**இடமும் பொழுதும்:** குந்திதேவி கன்னனிடம் பாண்டவர்களோடு சேர்ந்திருக்குமாறு வேண்டினாள். அது கேட்ட கன்னன் 'மற்றவற்றை..............புக்கு ?" என்று கூறினான்.

**விளக்கம்:** துரியோதனனது மனைவியும், கன்னனும் ஒரு முறை சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்தனர். வெளியே சென்றிருந்த துரியோதனன் அப்போது அங்கே வந்தான். அவனைக் கண்ட அவனது மனைவி ஆட்டத்தைப் பாதியில் நிறுத்திவிட்டு எழுந்தாள். அது கண்ட கன்னன் அவளது ஆடையைப் பிடித்து இழுக்க, அதனால் அவளது முத்துமாலை அறுந்து விழுந்தது. அப்போது துரியோதனன் எடுக்கவோ? கோர்க்கவோ? எனக் கன்னனிடம் வினவினான். அத்தகைய துரியோதனனுக்காகப் போர் புரிந்து உயிரைப் போக்கிக் கொள்வது தனது கடமை அல்லவா? என வினவினான்.

(இ) " பெற்றதாய் வேண்ட மறுத்தானெனும்
வார்த்தை உற்றழியாநிற்கு முலகு."

**இடமும் பொழுதும்:** குந்திதேவி கன்னனிடம் இரு வரங்கள் வேண்டினாள். ஒன்றால் பாம்புக் கணையை ஒரு முறைக்கு மேல் பயன் படுத்தலாகாது என்றும், மற்றொன்றால் அர்சுனனை அல்லது மற்றைய தம்பியர்களைக் கொல்லக் கூடாது என்றும் கேட்டுக்கொண்டாள். அது கேட்ட கன்னன், "பெற்றதாய்......................உலகு" என்று கூறினான்.

**விளக்கம்:** மற்றவர்கள் எதை வேண்டினுலும் மறுத்துக் கூறலாம். ஆனல், பெற்ற தாய் ஒன்றை வேண்ட, புதல்வன் மறுத்துக் கூறுதல் உலக வழக்கன்று. ஆகவே, கன்னன் குந்தியிடம் அவள் வேண்டியதை மறுத்துக் கூறினல் உலகுள்ளளவும் அப்பழிச்சொல் நிலேத்து நிற்கும் ஆகையால் அவள் வேண்டியபடியே இரு வரங்களேயும் கொடுப்பதாகக் கூறினன்.

**இலக்கணக் குறிப்பு:**

1. சீரடிகள் (சீர்மை + அடிகள்)—பண்புத்தொகை.

   புனல் நாடர்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

   உரைமின்—ஏவல் வினே முற்று.

2. கொற்றக் குமரன்—இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை.

   வண்ணமெலாம்—இடைக் குறை.

4. தின் + நீ = தின்னீ.

   தேர் வேந்தன்—இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

5. நன்னுதல் (நன்மை + நுதல்)—பண்புத்தொகை.

   பொன்னடி—உவமைத்தொகை.

   தடக்கை—உரிச் சொற்ருெடர்.

6. பொற்றேர்—மூன்ரும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

   ஐவரையும்—'உம்மை' முற்றும்மை.

   போர் வேந்தர்—இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

7. அறியா என்னே—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

   உண்ணுத் தகைமைய—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

8. மழகளிறு—உரிச்சொற்ருெடர்.

9. தடங்கண்—உரிச்சொற்றொடர்.
அருமணி (அருமை + மணி)—பண்புத்தொகை.
வெஞ்சமம் (வெம்மை + சமம்)—பண்புத்தொகை.

10. வெஞ்சரம் (வெம்மை + சரம்)—பண்புத்தொகை.

11. கேண்மின்—ஏவற் பன்மை வினைமுற்று.
மின்—முன்னிலை யசைச் சொல்.
வேகம்—ஆகுபெயர்.

12. பொருகளம்—வினைத்தொகை.
வேண்டுவன்—தன்மை ஒருமை வினைமுற்று.

13. பொன்னே—உவமை ஆகுபெயர்.
அழியா நிற்கும்—ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

## (ஏ) மனோன்மணீயம்

### 1. மனோன்மணீயத்தைப் பற்றியும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களைப் பற்றியும் நீவிர் அறிவன யாவை?

**மனோன்மணீயம்:** பாண்டிய மன்னன் சீவகன் மகள் மனோன்மணியின் வரலாற்றைக் கூறுதலின் இந் நூல் மனோன்மணீயம் என்னும் பெயர் பெற்றது. இது தமிழில் உள்ள சிறந்த நாடக நூலாகும்.

இந்நூல், லிட்டன் பிரபு இயற்றிய 'மறைவு வழி' என்னும் ஆங்கில நூலைத் தழுவி எழுதப்பட்டது. சுவை மிக்க கற்பனை நயம் வாய்ந்தது. இனிய உரையாடல்களைக் கொண்டது. இயற்கை வருணனைகளும் தத்துவக் கருத்துக்களும் நிறைந்தது.

**ஆசிரியர்:** பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் 'ஆலப்புழை' என்னும் ஊரில் பிறந்தவர். பெற்றோர்: பெருமாள் பிள்ளை, மாடத்தி அம்மாள். இவரது ஆசிரியர்

கோடக நல்லூர்ச் சுந்தர சுவாமிகள். இவர் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராய்ப் பணி யாற்றிப் புகழ்பெற்ருர். காலம் 1855—1897.

**2. பாண்டிய வீரர்களின் நாட்டுப் பற்றைக் குறித்துச் சீவகன் கூறியது யாது?**

பாண்டிய வீரர்களின் நாட்டுப்பற்றைக் குறித்து சீவகன் கூறியது:

" இந்தப் பாண்டியர் உரிமை கொண்டாடும் பண்பினர்; பகைவர்களே! அவர்தம் செருக்கைத் தீண்டாதீர்! சுதந்திரமே அவர்தம் உயிர்; மூச்சு வேறல்ல! இதனைக் கனவிலும் நன்ருகக் கருதுங்கள்" என்று எத்திசை யோர்க்கும் பறைசாற்றும்!

**3. போர்க் குறிக் காயத்தின் சிறப்பினைச் சீவகன் எங்ஙனம் எடுத்துக் கூறினன்?**

சீவகன் போர்க்குறிக் காயத்தின் சிறப்பினை எடுத்துக் கூறியமை:—இச்சிறந்த போரில் நீங்கள் ஏற்கும் காயம் வெற்றித் திருமகள் மனம் மகிழ்ந்து உங்களுக்கு முத்த மிட்டு அளித்த முத்திரையாகி (அடையாளமாகி) பல தலை முறைகட்கு இலட்சியமாக நிற்கும்.

போர்க் குறிக் காயமே 'புகழின் காயம்'. யாருக்கு இத்தகைய காயம் கிடைக்கும்? ஆ! பாருங்கள். இறுதி யற்ற தலைமுறையாக வரும் தனி மனிதர் நாள்தோறும் தான் அனுபவிக்கும் சுதந்திரத்தை அளித்த முன்னோர் அடைந்த விழுப்புண்களை எண்ணி மனம் அன்பால் உருகிச் சிந்துவர் கண்ணீர் என்ருல், அப்புண் பிச்சை எடுத்தாவது கொள்ளத்தக்கது அன்ரே? கூறுங்கள்! ஐயோ! அதுவும் புண்ணு? புகழின்கண் அல்லவா! யாவர் புண்படாது உலகில் புகழுடம்பு அடைந்தார்? புகழ் உடம்பு அன்றி இந்த இகழத்தக்க உடம்போ உண்மை யானது?

**4. பாண்டிய நாட்டு வீரர்களின் வீரத்தை மன்னன் எங்ஙனம் பாராட்டினன்?**

சீவகமன்னன் பாண்டியநாட்டு வீரர்களின் வீரத்தைப் பாராட்டியமை:—புகழ் உடம்பு அன்றி இந்த இகழத் தக்க

உடம்போ உண்மையானது? நொடிக்கு நொடி பிறந்து, நொடிக்கு நொடி இறக்கும் பிணங்கள் பல. இவர் எல்லாரும் பிறந்தார் எனக் கூறப்படுவாரோ? அத்தி மரத்தின் ஒரு பழத்தில் பிறந்து சாகும் கொசுக்கள் இவர்களைவிடக் கோடி மடங்கு அதிகமாகும். பிறந்தவர் எனப் படுவோர் புகழுடன் சிறந்தவரே ஆவார்.

அப்பெரும் புகழ் உடம்பு இப்படி இன்று இதோ எளிதாக உமக்கு எதிரில் வருதலால்(உங்களைப்) பலமுறை புகழ்ந்து உங்களுடைய பேற்றை எண்ணி வியந்தோம். அழுக்காறு கொள்வது ஒழுக்கமன்று எனினும் உங்கள் மீது அழுக்காறும் சிறிது கொண்டோம்.

## 5. போர் செய்வதற்கு அஞ்சும் கோழைகளைக் குறித்துச் சீவகவழுதி கூறியது யாது?

நீண்ட போர் செய்வதற்காக இங்கே நிற்பவர்களுள் தங்கள் உயிர் உடம்பு முதலியவற்றிற்கு நேரவிருக்கும் துன்பத்தைக் கருதி கலக்கம் அடைவோர் இருக்கிறார்கள் என்றால் கூறுங்கள்! எனது பேச்சு உண்மையானது! இதில் வஞ்சம் இல்லை. மானமோடு அவர்களையும் இந்தப் பெரிய நகரத்துள் நலமாக இருக்கச் செய்வோம். இது திண்ணம். சிறந்த மாதர்கள் பலர் இங்கே இருக்கிறார்கள். இவர்களுக்கு அம்மாதர்கள் பாதுகாப்பாக இருப்பர்.

## 6. இடம் சுட்டி விளக்குக.

(அ) 'வெந்தழற்கு அவரே இந்தன மாகுக!'

**இடமும் பொழுதும்:** பாண்டிய மன்னன் சீவகனுக்கும், சேர வேந்தன் புருடோத்தமனுக்கும், குடிலனது நயவஞ்சகத்தால் போர் மூண்டது. சேரப்படையினர் மதுரையை வளைத்து முற்றுகையிட்டனர். போர் கடுமையாக நடைபெற்றது. மன்னன் தன் வீரர்களுக்கு ஊக்க மூட்ட சில வீரவுரை கூறும்போது,

'வெந்தழற்கு அவரே இந்தனமாகுக!' என்று கூறினான்.

**விளக்கம்:** சீவகன் தன் வீரர்களை நோக்கி "நம்மோடு போர் செய்ய வந்திருக்கும் இக்கயவர்கள், உங்கள் உள்ளங்களில் மூட்டிய கொடிய சினமாகிய நெருப்புக்கு அவர்களே விறகாக அமையட்டும்" என்று கூறினான்.

(ஆ) "போர்க் குறிக்காயமே புகழின்காயம் !"

**இடமும் பொழுதும்:** பாண்டிய மன்னன் சீவகனுக்கும், சேரவேந்தன் புருடோத்தமனுக்கும், பாண்டியனின் அமைச்சன் குடிலனால் போர் மூண்டது. சேரர் மதுரையை வளைத்துக் கொண்டனர். போர் கடுமையாக நடைபெற்றது. சீவகன் தன் வீரர்களுக்கு ஊக்க மூட்ட சில வீரவுரை கூறும்போது,

"போர்க்குறிக்காயமே புகழின்காயம்!" என்று கூறினான்.

**விளக்கம்:** சீவகன் தன் வீரர்களை நோக்கி, "இப்போரில் நீங்கள் பெறவிருக்கும் விழுப் புண்கள் வெற்றி மகள் மனம் மகிழ்ந்து உங்களுக்கு அளித்த முத்தங்களாகி பல தலைமுறைக்குச் சான்று பகரும். இப்படிப்பட்ட போரிலே ஏற்படும் புண்களே புகழத்தக்க புண்களாகும். இது அனைவருக்கும் எளிதில் வாய்ப்பதன்று" என்று கூறினான்.

(இ) "சுதந்திர மவர்க்குயிர் ; சுவாச மற்றன்று."

**இடமும் பொழுதும்:** பாண்டிய மன்னனுக்கும், சேர வேந்தனுக்கும் குடிலனது சூது மதியால் போர் மூண்டது. அப்போது பாண்டிய மன்னன் சீவகன் தன் வீரர்களை ஊக்குவிக்க வீரவுரை சில கூறும்போது,

"சுதந்திர மவர்க்குயிர் ; சுவாச மற்றன்று." என்று கூறினான்.

**விளக்கம்:** சீவகன் "இந்தப் பாண்டியர் உரிமை கொண்டாடும் பண்பினர் ; பகைவர்களே! அவர் தம் செருக்கைத் தீண்டாதீர்! சுதந்திரமே அவர் தம் உயிர் ; மூச்சு வேறல்ல. இதனைக் கனவிலும் நன்கு கருதுங்கள்" என்று கூறினான்.

(ஈ) "உதும்பர தருவில் ஒருகனி யதனுட்
பிறந்திறு மசக மிவரினுங் கோடி!"

**இடமும் பொழுதும்:** பாண்டிய நாட்டரசன் சீவக வழுதிக்கும், சேர நாட்டரசன் புருடோத்தமனுக்கும் குடிலனின் வஞ்சகச் செயலால் போர் மூண்டது. அதுபோழ்து

சீவக மன்னன் தன் தானை வீரர்களை ஊக்கமூட்டச் சில வீரவுரை கூறினன். அப்போது,

"உதும்பர தருவில் ஒருகனி யதனுட்
பிறந்திறு மசக மிவரினும் கோடி!"

என்று கூறினன்.

**விளக்கம்:** சீவகவழுதி புகழுடம்பைப்பற்றித் தன் வீரர்களுக்கு விளக்கிக் கூறிக் கொண்டிருந்தான். "நொடிக்கு நொடித் தோன்றி, நொடிக்கு நொடி மறையும் பிணங்கள் பல. இவரெல்லாம் பிறந்தார் எனக் கூறப் படுவரோ? அத்தி மரத்தின் ஒரு பழத்தில் பிறந்து சாகும் கொசுக்கள் இவர்களைவிடக் கோடி மடங்கு அதிகமாகும். பிறந்தவர் எனப்படுவோர் புகழுடன் சிறந்தவராவர்" எனக் கூறினன்.

(உ) "உத்தம மாதர்க ளுண்டுமற் ருங்கே
எத்தனை யோபேர்; இவர்க்கவர் துணையாம்."

**இடமும் பொழுதும்:** பாண்டிய நாட்டிற்கும் சேர நாட்டிற்கும் நிகழவிருக்கும் போருக்காக பாண்டிய மன்னன் சீவகவழுதி தன் படை வீரர்களுக்கு ஊக்க மூட்டத்தக்க வீர உரைகள் பல பகர்ந்தான். அப்போது,

"உத்தம மாதர்க ளுண்டு மற்ருங்கே
எத்தனை யோபேர் இவர்க்கவர் துணையாம்."

என்று கூறினன்.

**விளக்கம்:** சீவகவழுதி வீரர்களை நோக்கி, வீரர் காள்! நிகழவிருக்கும் நீண்ட போரில் ஈடுபட இங்கே நிற்பவருள் தங்கள் உயிர் உடம்பு முதலியவற்றுக்கு நேர விருக்கும் துன்பத்தை நினைத்துக் கலக்கம் அடைவோர் உண்டென்ருல் கூறுங்கள்! எனது உரை உண்மை யானது! அதில் வஞ்சம் இல்லை. மானமோடு அவர்களை யும் இந்தப் பெரிய நகரத்துள் நலமாக இருக்கச் செய் வோம். இது திண்ணம். சிறந்த மாதர்கள் பலர் இங்கே இருக்கிருர்கள்; இவர்களுக்கு அவர்கள் பாதுகாவலாக இருப்பர் என்று கூறினன்.

**இலக்கணக் குறிப்பு :**

வெந்தழல் (வெம்மை + தழல்)—பண்புத்தொகை.
அன்புருகி(அன்பால் + உருகி)—மூன்றும் வேற்றுமைத் தொகை.
நினையுமின்—ஏவற்பன்மை வினைமுற்று.
தினம்தினம்—அடுக்குத் தொடர்.
கணங்கணம்—அடுக்குத் தொடர்.
இணையிலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
பிறந்தார்—வினையாலணையும் பெயர்.
பெரும்புகழ் (பெருமை + புகழ்)—பண்புத்தொகை.
ஆயிரம் ஆயிரம்—அடுக்குத்தொடர்.
உயிருடம்பு—உம்மைத்தொகை.
உறும் அயர்வு—வினைத்தொகை.
மாநகர்—உரிச் சொற்றொடர்.
சாற்றுமின், கருதன்மின், நினையீர் } ஏவற்பன்மை வினைமுற்றுகள்
செப்பினோம்—செப்புதல்—திசைச்சொல்.

# IV. பல்சுவை

## (அ) புறநானூறு

### 1 புறநானூறு—குறிப்பு எழுதுக.

புறப்பொருளைப் பற்றிக் கூறும் நானூறு பாடல்களைக் கொண்ட நூலாதலின் இந்நூல் இப்பெயர் பெற்றது. இஃது எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று. இந்நூலில் உள்ள பாடல்கள் சங்கப் புலவர் பலரால் இயற்றப் பட்டவை. காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு. சங்க காலத்து அரசர்கள், வள்ளல்கள் ஆகியோரைப் பற்றியும் மக்கள் வாழ்க்கையைப் பற்றியும் அறிய இந்நூல் சிறந்த கருவியாய் உள்ளது.

2. **விளக்குக.**

1. **திணை: பொதுவியல்:** வெட்சி முதலிய புறத்திணை கட்கெல்லாம் பொதுவாக உள்ளனவும் அவற்றில் கூறு தொழிந்தனவுமாகிய செய்திகளைக் கூறுவது.

2. **துறை: பொருண்மொழிக் காஞ்சி:** முனிவரும், முனிவரைப் போன்ற பெருமக்களும் இம்மை மறுமைகளில் உயிர்க்குறுதி பயப்பதென்று தாம் தெளிவாக அறிந்த பொருளைக் கூறுவது.

3. **திணை: வாகைத் திணை:** பகைவரைக் கொன்று வாகைப் பூவைத் தலையிலே சூடி ஆரவாரித்தல்.

4. **துறை: ஏருண்முல்லை:** எதிரற்ற வீரம் மேலும் மேலும் பெருகுகின்ற குடியின் இயல்பைக் கூறுவது.

3. **கணியன் பூங்குன்றனார் கூறும் நல்லுரைகளைத் தொகுத்து எழுதுக.**

கணியன் பூங்குன்றனார் கூறும் நல்லுரைகள்:— எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார்; கேடும் ஆக்கமும் தாமே வருமேயல்லாது பிறர் தர வாராதன; வருந்துவதும் அதைத் தீர்ப்பதும்கூட தாமே வருவன; இறப்பதும் புதிதன்று; கருவில் தோன்றிய நாள் முதலே தொடங்கியுள்ளது; வாழ்வதை இனியது என்று மகிழ்ந்ததும் இல்லை; வெறுப்பு வந்தபோது இன்னாதது என்று இருத்தலும் இல்லை; நீர் சென்ற வழியே தெப்பம் செல்வதுபோல உயிர் ஊழின் வழியே படும் என்பதை நூல்களால் அறிந்தோமாதலால் நன்மைகள் மிக்கவரை மதிப்பதும் இல்லை; சிறியோரைப் பழித்தல் அம்மதித்தலினும் இல்லை.

4. **தமக்கு நரை உண்டாகாமைக்குக் காரணங்களாகப் பிசிராந்தையார் கூறியன யாவை?**

தமக்கு நரை உண்டாகாமைக்குப் பிசிராந்தையார் கூறிய காரணங்கள்:

பிசிராந்தையாரின் மாட்சிமைப்பட்ட குணங்களையுடைய மனைவியுடனே புதல்வரும் அறிவு நிரம்பினார்கள் என்றும், அவரது ஏவல் செய்வோர் அவர் கருதியதனையே

கருதுவரென்றும், அரசனும் முறையில்லாதனவற்றைச் செய்யாதவனுய் காக்கிருன் என்றும், அதற்கு மேலாக அவர் வாழ்கின்ற ஊரில் நற்குணங்களால் அமைந்து பணியவேண்டுமிடத்துப் பணிந்து ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினை உடைய சான்ருேர் பலர் வாழ்கின்ருர் என்றும் அதனுல் தனக்கு எத்தகைய கவலையுமில்லை யாகையால் தமக்கு நரை உண்டாகவில்லை என்று கூறுகிருர்.

### 5. "நின் மகன் யாண்டுளன்?" என்றவினுவிற்கு வீரத் தமிழன்னை கூறிய விடை யாது?

வீரத் தமிழன்னை தனது மகன் எவ்விடத்து உளனு யினும் தான் அறியாள் என்றும்; புலி தங்கியிருந்து சென்ற மலைக்குகையைப் போல அவனைப் பெற்ற வயிருே அஃது என்றும் சுட்டிக்காட்டி, அவன் போர்க் களத்தின் கண்ணே தோன்றுவான் என்றும் கூறினுள்.

## (ஆ) வருணனை

## 1. தென்றல்

### 6. தென்றலின் இயக்கம் திருவிளையாடற் புராணத்தில் எங்ஙனம் புனைந்துரைக்கப் பட்டுள்ளது?

தென்றல் காற்று சோலையில் நுழைந்து, குளத்தில் புகுந்து, அங்குள்ள தாமரை மலர்களை அசைத்து, மண முள்ள இருவாட்சி, முல்லை, மல்லிகை முதலிய மலர்ப் பந்தல்களில் தாவி, தேன் நிரம்பிய மலர்களின் மணத்தை உண்டு, குளிர்ச்சியும் மென்மையும் அடைந்து, பல இடங்களில் சென்று கல்வி கற்கும் அறிவுள்ள மாண வனைப் போல வீசியது என்று தென்றலின் இயக்கத்தைத் திருவிளையாடற் புராணம் புனைந்துரைக்கின்றது.

## 2. நெற்கதிர்

**7. நெற்கதிரின் தோற்றத்தைக் குறித்து திருத்தக்கதேவர் கூறுவது யாது?**

நெற்பயிர்கள் கர்ப்பமுற்ற பச்சைப் பாம்பைப் போல மெதுவாகக் கருக்கொண்டன. பிறகு நெற்கதிர்களை ஈன்று, கீழ்மக்களுடைய செல்வத்தைப் போன்று தம் தலைகளிலே தாங்கியிருந்தன. இறுதியாக கற்றறிந்தார் போல நெற்கதிர்கள் முற்றித் தலை சாய்த்துக் கிடந்தன என்று நெற்கதிரின் தோற்றத்தைத் திருத்தக்கதேவர் கூறுகிறார்.

## 3. எழில் ஓவியம்

**8. காட்டில் கண்ட எழில் ஓவியத்தைக் கவிஞர் வாணிதாசனார் எங்ஙனம் புனைந்துரைக்கின்றார்?**

காட்டில் மகிழ்ச்சி கொண்ட மயில் அகவும் எனவும்; புள்ளிகளையுடைய கருங்குயில் பாட்டிசைத்துக் கொண்டிருக்கும் எனவும்; தம் துணையைப் பிரிந்த பறவைக் கூட்டங்கள் துணையை அழைக்கும் எனவும்; விளா மரத்தில் ஒளிந்து தனது உணவை உண்ணுகின்ற அணில், கிளியினுடைய சிவந்த மூக்கை மிளகாய்ப்பழம் என்றெண்ணி அதனை உண்பதற்குப் பாயும் எனவும் அழகிய ஓவியத்தைக் கவிஞர் வாணிதாசனார் புனைந்துரைக்கின்றார்.

## (இ) சீட்டுக்கவி

**9. சீர்காழி அருணாசலக் கவிராயர் முத்துக்கிருட்டின முதலியாரின் சிறப்புகளாகவும், தம் சிறப்புகளாகவும் கூறுவன யாவை?**

சீர்காழி அருணாசலக் கவிராயர் மணலி முத்துக்கிருட்டின முதலியாரைச் சந்திரன் என்றும் தன்னை அச்சந்திரனை விரும்பும் குவளை மலர் என்றும்; அவரை மழைமேகம்

என்றும்; தன்னை அதனை எதிர்நோக்கும் செந்நெற்பயிர் என்றும்; அவரை ஆதவன் என்றும்; தன்னை அதனை எதிர்நோக்கும் தாமரை என்றும்; அவரை அன்னை என்றும்; அவரது அன்பைப் பெற இருக்கும் தன்னைப் பிள்ளை என்றும்; அவரைப் புரவலன் என்றும்; தன்னைப் புரவலனது கருணையை எதிர்நோக்கும் புலவன் என்றும் கூறுகிறார்.

## (ஈ) இரட்டுற மொழிதல்

### 1. பாணனும் விரலியும்

**10. அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடலின் நயத்தை விளக்குக.**

அந்தகக் கவி வீரராகவ முதலியார் இரட்டுற மொழிதல் என்னும் உத்தியைக் கையாண்டு பாணனுக்கும் பாடினிக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலைச் சுவைபட விளக்குகிறார். இராமன் என்ற வள்ளலைப் பாடிப் பெற்று வந்த பரிசில் யாதெனப் பாடினி பாணனை வினவுகிறாள். அதற்குப் பாணன் தான் பெற்ற பொருளைத் தரும் பல சொற்களைக் கூற, பாடினி வெவ்வேறு வகையாகப் பொருள் கொள்வதாகப் புனைந்துரைக்கிறார்.

பாணன் யானை என்ற பொருள் தோன்ற 'வம்பதாங் களபம்' என்று கூற ,பாடினி மணம் பொருந்திய சந்தனம் என்றும், மாதங்கம் என்று கூற, நிறைந்த பொன் என்றும், பம்பு சீர் வேழம் என்று கூற, கரும்பு என்றும், பகடு என்று கூற, எருது என்றும், கம்பமா என்று கூற, நல்ல களியாகும் என்றும் பொருள் கொண்டு இறுதியில் கைம்மா என்று கூற, அது யானை என்ற பொருளை யுணர்ந்தாள் என்று கூறுவதன் வாயிலாக யானையைக் குறிக்கும் பல சொற்களையும் தொகுத்துக் கூறுகிறார்.

## 2. பாம்பும் எலுமிச்சம் பழமும்

### 11. பாம்பு எவ்வாறு எலுமிச்சம் பழத்திற்கு ஒப்பாகும் ?

| பாம்பு | எலுமிச்சம் பழம் |
| --- | --- |
| 1. மிகவும் விஷத்தைப் பொருந்தியிருக்கும். | 1. பெரிய மனிதர்களின் கைகளில் சேர்ந்திருக்கும். |
| 2. சிவபிரானது தலையிலே ஏறியிருக்கும். | 2. பைத்தியக்காரர்களின் தலையிலே வைத்துத் தேய்க்கப்படும். |
| 3. காற்றை உணவாகக் கொள்ளும். | 3. அரியப்படும். |
| 4. பருக்கும்; மேலே எழுந்து ஆடும். | 4. தன்மேல் உப்பு இடப்படும். |
| 5. கோபக் குணம் உடையது. | 5. எரிச்சலைத் தரும் தன்மையுடையது. |

ஆகவே, பாம்பும் எலுமிச்சம் பழமும் ஒப்பாகும்.

## (உ) சிற்றிலக்கியம்

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

### 12. குமரகுருபர அடிகளார் மீனாட்சியம்மையின் பெருமைகளாகக் கூறுவன யாவை ?

மீனாட்சியம்மை வேதங்களின் பயனாக இருப்பவள் என்றும், தமிழின் சுவையாக இருப்பவள் என்றும், ஆணவம் நீங்கிய அடியார்களின் உள்ளமாகிய கோயிலில் ஏற்றி வைக்கும் விளக்குப்போன்றவள் என்றும், சிமயங்களோடு கூடிய இமயமலையில் விளையாடும் இளமையான பெண் யானை போன்றவள் என்றும், இறைவன்

(சிவபெருமான்) தன் உள்ளத்தே அழகு ஒழுக எழுதிப் பார்க்கும் உயிரோவியம் போன்றவள் என்றும், அடர்ந்த அளகபாரத்தைத் தாங்கிய இளைய வஞ்சிக் கொடியைப் போன்றவள் என்றும், மலையத்துவச பாண்டியனின் மகளாவாள் என்றும், அடிகளார் மீனாட்சியம்மையின் பெருமைகளைக் கூறியுள்ளார்.

## (ஊ) வழிபாட்டுப் பாடல்கள்

### 13. பாரதியார் சக்தியிடம் கூறும் முறையீடும், வேண்டுகோளும் யாவை?

**பாரதியார் சக்தியிடம் கூறும் முறையீடு:** தேவ உலகத்தையும் பூ உலகத்தையும் ஒப்பற்ற ஆட்சி புரியும் சக்தியே! உனது அருளை எனது கண்ணும் கருத்துமாகக் கொண்டு அன்பு மிகக் கசிந்து உருகி நான் செய்யும் பூசனைகள் அனைத்தும் பாலைவனத்தில் பெய்த மழையாக ஆகுமோ? என்றும், உனக்கு நினைத்துப் பார்க்க மனம் இல்லையோ? என்றும், அறிவில்லாது உலகினைப் படைப்பாயோ? என்றும், பாரதியார் சக்தியிடம் முறையிட்டார்.

**பாரதியார் சக்தியிடம் விடுக்கும் வேண்டுகோள்:** பாரதியார் தான் நினைக்கும் செயல்கள் எல்லாம் வெற்றி பெற அவள் அருள் பாலிக்கவேண்டும் என்றும், தொழில் செய்வதற்குப் பெரும் பொருள் தேவை என்றும், அத் தொழிலுக்குப் பலர் துணை செய்யவேண்டும் என்றும், சுவை மிகுந்த பாட்டோடு இராகமும் தாளமும் நன்கு உள்ளத்தில் பதியவேண்டும் என்றும், கோடிக்கணக்கான பண் வகைகளைத் தான் பாடுவதற்குத் திறமை அடைதல் வேண்டும் என்றும், சக்தியிடம் வேண்டுகோள் விடுத்தார்.

### 14. சுந்தரர் கூறும் வெள்ளடையப்பனின் இயல்புகள் யாவை?

**வெள்ளடையப்பனின் இயல்புகள்:** இசையின் இனிமையை ஒத்தவன் என்றும், பழத்தின் சுவை போன்றவன் என்றும், கண்ணின் கருமணி போன்றவன் என்றும், மிக்க இருளின்கண் ஒளி போன்றவன் என்றும், இப்புவி

வாழும் அடியார்களின் மனத்தில் துன்பம் வாராமல் காப்பவன் என்றும் வெள்ளடையப்பன் இயல்புகளைச் சுந்தரர் கூறுகிறார்.

## 3. திவ்வியப் பிரபந்தம்

### திருமால்

**15. குலசேகராழ்வார் தம்கண் குளிரக்காண விரும்பும் காட்சியை விளக்குக.**

இருள் அகல ஒளி உமிழும் இரத்தினங்களைத் தம் நெற்றியில் உடையனவும், நிறைந்த புள்ளிகளையும் அழகிய ஆயிரம் படங்களையும் பொருந்தியனவும், பாம்புகளின் அரசனும் ஆகிய மிக்க ஒளிவீசும் ஆதிசேடன் என்கிற அழகு உயர்ந்த பள்ளியில் (படுக்கையில்) திருவரங்கத் திருத்தலத்தில் காவிரியாறு தன் அலைக்கரங்களால் திருவடிகளை வருட அரிதுயில் கொண்டிருக்கும் கரிய மாணிக்கமணி போன்றவனும், பேரழகாகத் திகழ்பவனும் ஆகிய திருமாலைத் தன் கண்கள் குளிரும்படித் தான் கண்டு களிக்கும் நாள் எந்த நாளோ? என்று குலசேகர ஆழ்வார் கூறியுள்ளார்.

## 4. இரட்சணிய மனோகரம்

### இயேசுநாதர்

**16. இயேசுநாதரது திருப்பெயரின் சிறப்பை எச். எ. கிருட்டினப் பிள்ளை எங்ஙனம் எடுத்துக் கூறியுள்ளார்?**

இயேசுநாதரது திருப்பெயர், உயிர்த்தொகுதி நற்கதியடைய வானுலகிலும், நிலவுலகிலும், இது போன்றது வேறு இல்லை என்று வேதங்கள் பலமுறை புகழ்ந்துரைப்பதும், பாபத்தைச் செய்யும் மக்களுக்கு இனிய அமுதமாக விளங்குவதும் ஆகும் என்று கிருட்டினப் பிள்ளை கூறியுள்ளார்.

# 5. சீருப்புராணம்

## மகமது நபி

**17. இறைவன் பெருமைகளாக உமறுப் புலவர் கூறுவன யாவை?**

உலகிலுள்ள மேன்மையான பொருள்கள் பலவற்வற்றுள்ளும் மேன்மையான பொருள் என்றும், சிறந்த செல்வம் என்றும், சிறந்த செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்த செல்வம் என்றும், சிறந்த ஞானங்கள் யாவற்றிலும் சிறந்த ஞானம் என்றும், நுட்பமான அணுவுக்கும் உட்பட்ட அணுவானவன் என்றும், சூரியன், சந்திரன், விண்மீன்கள் போன்ற யாவும் தமக்குச் சமமாக நினைத்தாலும் ஒப்பாக மாட்டாதவன் என்றும், உருவங்களில் சிறந்த பேரழகுடையவன் என்றும், இப்புவி வாழ்கின்ற பல உயிர்களின் கருவினுக்குக் காரணமாய் இவ்வுலகைக் காத்துவரும் இறைவன் என்றும், அவனை உள்ளத்தில் இடைவிடாது எண்ணுதல் யாவர்க்கும் உரிய கடனாகும் என்றும் உமறுப் புலவர் கூறுகிறார்.

**18. பின்வரும் உவமைகளைப் பொருளுடன் பொருத்தி விளக்குக.**

(அ) "கல்பொரு திரங்கு மல்லற்பேர் யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல்"

தனது விரைவினல் மலையை மோதி உடைக்கும் வளப்பத்தை யுடைய பெரிய ஆற்றின் நீர் சென்ற வழியே செல்லும் தெப்பம் போல பெறுவதற்கரிய உயிர் ஊழின் வழியே படும் என்பது பொருள்.

இதில் உயிருக்கு ஆறும், ஊழிற்குப் புணையும் (தெப்பமும்) உவமைகளாகக் கூறப்பட்டன.

(ஆ) "புலி சேர்ந்து போகிய கல்லளைபோல"

புலி தங்கியிருந்த மலைக் குகை போல வீரன் ஒருவனை ஈன்றெடுத்த வீரத் தாயின் வயிறு இருந்தது என்பது பொருள்.

இதில் வீரனுக்குப் புலியும், அவனை ஈன்ற வீரத் தாயின் வயிற்றுக்குப் புலி தங்கியிருந்து சென்ற மலைக் குகையும் உவமையாகக் கூறப்பட்டன.

(இ) " அங்கங்கே கலேகள் தேரும் அறிவன் "

நல்லாசிரியர் பலரைத் தேடிச் சென்று அவர்களிடம் நிறைந்துள்ள அறிவுக் கலேகளே அறிந்துகொள்ளும் அறிவுடைய மாணுக்கனேப் போல, தென்றல் நறுமணம் உடைய பல பொருள்களே நாடிச் சென்று அம்மணங் களேப் பெற்று மெல்லென்று வீசியது என்பது பொரு ளாகும்.

இதில் நறுமணமுடைய பல பொருள்கள் நற்கலேகள் பலவற்றைக் கற்ற அறிஞர்கட்கும், நல்லறிவுள்ள மாணுக்கன் தென்றற் காற்றுக்கும் உவமைகளாகக் கூறப் பட்டன.

## 19. இடம் சுட்டி விளக்குக.

(அ) " தீதும் நன்றும் பிறந்தர வாரா "

**இடமும் பொழுதும் :** கணியன் பூங்குன்றனுர் பாடிய புறப் பாடலில் பயிலும் வரி இஃது. இதில் உலக மக்கள் அறிந்தொழுக வேண்டிய ஒழுக்கங்களேக் கூறப் போந்த ஆசிரியர் ' தீதும் நன்றும் பிறர் தர வாரா ' என்று கூறினர்.

**விளக்கம் :** உலக மக்கள் அறிந்து ஒழுக வேண்டிய ஒழுக்கங்களேப் பற்றிக் கூறிய ஆசிரியர் கேடும் ஆக்கமும் தாமே வருமேயல்லது பிறர்தர வாராதன எனக் கூறி யுள்ளார்.

(ஆ) " ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்ரேர் பலர்யான் வாழு மூரே "

**இடமும் பொழுதும் :** ஆண்டுகள் பல கழிந்தும் தனக்கு நரை உண்டாகாமைக்குக் காரணங்கள் பல கூறிய பிசிராந்தையார்,

" ஆன்றவிந்...........வாழுமூரே "

எனக் கூறிமுடித்தார்.

**விளக்கம் :** பல ஆண்டுகள் கழிந்தும் தனக்கு நரை தோன்ருமைக்குக் காரணங்களேக் கூறிக்கொண்டு வந்த ஆசிரியர் அவைகள் அனேத்திற்கும் மேலாக தான் வாழு கின்ற ஊரின் கண் நற்குணங்களால் அமைந்து, பணிய

வேண்டுமிடத்துப் பணிந்து ஐம்புலனும் அடங்கிய கொள்கையுடைய சான்றோர் பலர் வாழுகின்றனர் என மொழிந்தார்.

(இ) " ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே "

**இடமும் பொழுதும்:** காவற் பெண்டு பாடிய புறப்பாட்டில் பயிலும் அடிகள் இவை. வீரத்தமிழ் தாய் ஒருத்தியை நோக்கி, ஒரிள மங்கை நின்மகன் யாண்டுளன்? எனவினவிய போது தமிழ்த்தாய்,

" ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே "

என்று விடையளித்தாள்.

**விளக்கம்:** வீரத்தாய் தனது வயிற்றைச் சுட்டிக் காட்டி அவ்வீரனை ஈன்ற வயிறு இதுவாகும் எனவும், ஆனால் அவன் போர்க் களத்தின்கண் போரிட்டுக் கொண்டிருப்பான் எனவும் விடையளித்தாள்.

(ஈ) " நான் கவிஞன், வழுதி நீ காண் '

**இடமும் பொழுதும்:** சீர்காழி அருணசலக் கவிராயர் மணலி முத்துகிருட்டினருக்கு எழுதிய சீட்டுக் கவியில் அவரையும் தன்னையும் பலவகை எடுத்துக் காட்டுகளால் கூறும்போது நான் கவிஞன், வழுதி நீ காண் என்றும் கூறினர்.

**விளக்கம்:** மணலி முத்துகிருட்டினர் புலவர்களைப் புரக்கின்ற புரவலன் என்றும். தன்னைப் புலவன் என்றும் சீர்காழி அருணசலக் கவிராயர் உவமை முகத்தாற் கூறினர்.

## இலக்கணக் குறிப்பு:

1. படூஉம்—செய்யுளிசையளபெடை.
   தலைஇ—செய்யுளிசையளபெடை.
   இலம்—தன்மைப் பன்மை வினைமுற்று.
2. கண்டனையர் (கண்ட+அனையர்)—அகரம் தொக்கது விகாரம்.

3. சிற்றில் (சிறுமை + இல்) } பண்புத்
நற்றூண் (நன்மை + தூண்) } தொகைகள்.

வினவுதி—முன்னிலை ஒருமை வினைமுற்று.

ஒரும், மாதோ—அசை நிலைகள்.

(ஆ)

1. வாவி புகுந்து—ஏழாம் வேற்றுமைத்தொகை.

பந்தர்—மொழியிறுதிப் போலி.

இப்பாடலிற் பயின்றுவரும் அணி உவமையணி.

2. அருஞ்சூல் (அருமை + சூல்)—பண்புத்தொகை.

பசும்பாம்பு (பசுமை + பாம்பு)—பண்புத்தொகை.

மேலலார்—இடைக்குறை.

இச்செய்யுளில் பயின்றுவரும் அணி உவமையணி.

3. களிமயில்—வினைத்தொகை. இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகையெனினும் ஒக்கும்.

கருங்குயில் (கருமை + குயில்)—பண்புத்தொகை. இனமில்லா அடைமொழியும் ஆம்.

துணை பிரிந்த—இரண்டாம் வேற்றுமைத் தொகை.

உணும்
உண } இடைக் குறைகள்.

ஒளிமூக்கு—இரண்டனுருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

4. கண்டாய்—முன்னிலையசை.

செஞ்சாலி (செம்மை + சாலி)—பண்புத்தொகை.

(உ)

1. அகந்தைக் கிழங்கு—உருவகம்.

உளக்கோயில்—உருவகம்.

வளர்சிமயம்—வினைத்தொகை.

இமையப்பொருப்பு—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

எறிதரங்கம்—வினைத்தொகை.

குழற்காடு—உருவகம்.

(ஊ)

1. கசிந்து கசிந்து—அடுக்குத்தொடர்.

3. சுடர்மணி—இரண்டனுருபும் பயனும் உடன் தொக்கத்தொகை.

பெருநகர் (பெருமை+நகர்)—பண்புத்தொகை.

திரைக்கை—உருவகம்.

அடிவருட—இரண்டாம் வேற்றுமைத்தொகை.

கருமணி (கருமை+மணி)—பண்புத்தொகை.

4. இன்னமுது (இனிமை + அமுது)—பண்புத் தொகை.

மதித்திடா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

பேரொளி (பெருமை+ஒளி)—பண்புத்தொகை.

பூதலம்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

பெருந்தலம் (பெருமை+தலம்)—பண்புத் தொகை.

---

# உரைநடைப் பகுதி

## 1. நமது தாய் மொழி

(திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார்)

### 1. மொழியின் பயன் யாது? தாய்மொழி யாவது யாது?

மக்கள் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதன மாய் இருப்பது மொழி. மொழியே மக்களை மாக்களி னின்றும் வேறுபடுத்துவது ஆகும்.

எம்மொழி எவ்வினத்தவரால் வழிவழியாகப் பேசப் படுகின்றதோ, அம்மொழி அவ்வினத்தவர்க்குத் தாய் மொழி என்று சொல்லப்படும்.

### 2 திருந்திய மொழிகள் யாவை? அவற்றின் தன்மைகள் யாவை?

ஆரியம், எபிரேயம், இலத்தீன், கிரேக்கம், தமிழ் என்னும் இவை பல்வகைப் பெருமைகளும், தொன்மை யும் வாய்ந்த திருந்திய மொழிகள் எனப்படுபவை.

கருத்துக்களைத் தடையின்றி வெளியிடத் தேவை யான மிகுந்த சொற்களும், திருந்திய இலக்கணங்களும் வளஞ்செறிந்த நல்ல இலக்கியங்களும் வாய்ந்தவையே திருந்திய மொழிகள் ஆகும்.

### 3. தமிழ் மொழியின் தொன்மையும் இனிமையும் குறித்து ஆசிரியர் கூறுவன யாவை?

(20 வரிகள்)

**தொன்மை:** நம் தாய் மொழியாகிய தமிழ் இன்ன காலத்தில் தோன்றியதென்று வரையறுக்க முடியாத அத்துணைப் பழமை வாய்ந்ததாகும். ஏறக்குறைய இரண் டாயிரம் ஆண்டுகளின் முற்பட்ட சங்க இலக்கியங்

களையும், அவற்றினும் முந்தியதாகிய தொல்காப்பியத்தையும் வைத்து நோக்குமிடத்துப் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்பே தமிழ் உயரிய நிலையை அடைந்துள்ளமை புலனுகின்றது.

**இனிமை :** தமிழ் மிக்க இனிமையுடைய மொழியென்றும், இலக்கண வரம்புடைய மொழியென்றும், தொன்றுதொட்டுப் பலராலும் பாராட்டப் பெற்று வருகிறது. பழைய புலவர்கள் தமிழ் மொழியைக் குறிக்குமிடத்தெல்லாம் அதன் பெயரை வாளா கூருது, செந்தமிழ், பைந்தமிழ், வண்டமிழ், ஒண்டமிழ், மென்றமிழ், இன்றமிழ் என்று இவ்வாறு யாதேனும் ஒரு சிறந்த அடைமொழி கொடுத்தே வழங்கி வந்திருக்கின்றனர். தமிழ் என்ற சொல்லுக்கே இனிமை என்பது பொருளாகும். கவிச் சக்கரவர்த்தி கம்பர் "செவ்விய மதுரம் சேர்ந்த நற்றமிழ்' என்றும், குமரகுருபரர் 'தீஞ்சுவைக் கனியும் தண்டேன் நறையும் வடித்தெடுத்த சாறுங் கனிந்து ஊற்றெடுத்த பசுந் தமிழ்' என்றும், பாரதியார் 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணேம்' என்றும் சிறப்பித்துக் கூறுவதால் தமிழின் இனிமை புலனுகும்.

## 4. தமிழ்மொழியின் இனிமையைக் கம்பரும் குமரகுருபரரும் எங்ஙனம் பாராட்டியுள்ளனர்?

கவிச் சக்கரவர்த்தி கம்பர், தமது இராமாயணத்தில் அயோத்தி நகரைக் குறிக்கு மிடத்தே, அது

"செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்றமிழிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும்
வடநூன் முனிவரும் புகழ்ந்தது"

என்று பாடியுள்ளார். இதில் பல அடைமொழிகளால் தமிழ் சிறப்பிக்கப் பெற்றுள்ளதோடு வடநூலாளரும் தமிழைப் புகழ்வதாகக் குறிக்கப் பெற்றுள்ளது.

குமரகுருபரர் என்னும் புலவர் பெருமான் தாமியற்றிய முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில், தமிழைத் தீஞ்சுவைக்கனி' என்றும், தண்டேன் நறை என்றும், அவற்றை வடித்தெடுத்த சாரம் என்றும், அது கனிந்து எடுத்த ஊற்று என்றும் பலவாருகப் புனைந்துரைக்கிருர்.

**5. தமிழின் இனிமையை உணர்ந்து இறைவனைப் பாடி அருள்பெற்றோர் யாவர் ?**

தமிழ் தன் இனிமையால் கடவுளரையும் தன் வயமாக்கும் இயல்பினதாதல் பற்றியே பரம்பொருளாகிய இறைவனைப் பாடி அவனருளைப் பெறுவதற்குத் திருஞான சம்பந்தர் முதலிய நாயன்மார்களும், சடகோபர் முதலிய ஆழ்வார்களும், மற்றும் பட்டினத்தார், தாயுமானவர், இராமலிங்க அடிகள் முதலிய பெரியோர்களும் தமிழையே கருவியாகக்கொண்டு பாடியுள்ளார்கள்.

**6. தமிழ் இனிதாதற்குக் காரணங்கள் யாவை ?**

தமிழ் இனிதாதற்குக் காரணம் அதன் மென்மை, எளிமை, தெளிவு முதலியனவாகும். தமிழ்மெய் எழுத்துகளில் வல்லெழுத்து என்று ஒரு பிரிவு இருப்பினும், வேறு மொழிகளிலுள்ள சில எழுத்துகளை நோக்கின் இவை மென்மையுடையனவே. அன்றியும் ஒற்றெழுத்துகளும் டகரம் முதலிய உயிர் மெய் எழுத்துகளும் சொல்லின் முதலில் வாராதிருப்பதும். வல்லொற்றுகளும் வேறு சில எழுத்துகளும் இறுதியில் வாராதிருப்பதும், சொல்லின் இடையில் சில எழுத்துகளுடன் சில எழுத்துகள் கூடாதிருப்பதும் முதலியவெல்லாம் சொற்கள் மென்மையும் எளிமையும் உடையனவாதற்குக் காரணமாகின்றன.

தமிழுக்கே சிறப்பாயுள்ள ழகரஒலி மிக்கஇனிமையுடையதொன்று.

இத்தகைய காரணங்களால் தமிழ் இனிமைவாய்ந்த மொழியாக விளங்குகிறது.

**7. தமிழர்கள் நாகரிகம், தத்துவ உணர்வு ஆகியவற்றை உணர்த்தும் சான்றுகள் யாவை ?**

இலக்கணத்தில் எழுத்துகளுக்கு உயிர், மெய் என்று பெயரிட்டிருப்பதும், சொல்லையும் பொருளையும் உயர் திணை, அஃறிணை என்று பாகுபடுத்தியிருப்பதும் ஆகிய இவற்றிலிருந்தே தமிழர்களின் நாகரிகம், தத்துவ உணர்வு ஆகியவற்றைக் குறிப்பாக அறியக் கூடும்.

**8. சங்க இலக்கியங்களால் நாம் அறியக் கூடியவை யாவை?**

(1) சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகைகளிலிருந்து அக்காலத்தில் கல்வி எவ்வளவு பரவியிருந்ததென்பதும்;

(2) வேளாண்மை, வாணிகம், கைத்தொழில்கள் எங்ஙனம் ஓங்கியிருந்தன என்பதும்;

(3) அரசியல், சமயநிலை, ஒப்புரவொழுக்கம் என்பன எத்தகைய நன்முறையில் விளங்கின என்பதும்;

(4) மற்றும் தமிழர்களுடைய காதல், மானம், வீரம் வண்மை, நீதி, சான்றுண்மை முதலியன சிறந்து விளங்கின என்பதும் நன்கறியப்படும்.

**9. திருக்குறளின் சிறப்பையும் தமிழ்க் காப்பியங் களின் சிறப்பையும் விளக்கி எழுதுக.**

திருக்குறள் என்னும் தெய்வச் செந்தமிழ் மறை யானது தமிழர் தனி நாகரிகத்தின் ஒப்பற்ற அடையாளம். அது நாம் அறியவேண்டிய பொருளனைத்தையும் எளிதில் அடையுமாறு திரட்டித் தந்து நமக்கு வறுமைக் காலத் துதவும் சேமிப்பாக விளங்குவது.

சிலப்பதிகாரம், சிந்தாமணி, கம்பராமாயணம், பெரிய புராணம் முதலிய காப்பியங்களோ, ஒன்பான் சுவையும் பெய்து வைத்த சுவைப் பெட்டகங்கள்.

**10. காலத்திற்கேற்ற மாறுதல்களைக் கொண்டு தமிழ் மொழி வளர்ந்துள்ளது என்பதைச் சான்று காட்டி விளக்குக. (20 வரிகள்)**

உலகிலுள்ள எம்மொழியும் தோன்றிய காலந் தொட்டு ஒரே நிலையில் இருப்பதில்லை. மாறுபாடுகளை ஏற்காத இடத்து எம்மொழியும் வழக்காறு அற்றுப் போகும். மாறுபாடுகளை ஏற்கும் மொழியே உலகில் நிலைத்து நிற்கும் தகுதி பெற்று விளங்கும். தமிழ் பல்லாண்டுகளாக நிலைத்து நிற்பதற்குக் காரணம் காலத் திற்கு ஏற்ற மாறுபாடுகளை ஏற்றுக்கொண்டதேயாகும்.

சமணம், புத்தம், கிருஸ்துவம், முகமதியம் என்னும் மதங்களின் கொள்கைகள் அவ்வக் காலந்தோறும் தமிழில் வந்தேறின.

பிறமொழிச் சொற்களையும், பொருள்களையும் தமிழ் வெறுக்கவில்லை. ஆசிரியர் தொல்காப்பியனாரே வழி நூல் வகையுள் மொழிபெயர்த்து இயற்றுதலைச் சேர்த்து, இன்றியமையாத வடசொற்களை எடுத்துக்கொள்வதற்கு வழி வகுத்துள்ளார். அவ்வாறே எத்தனையோ மொழி பெயர்ப்பு நூல்கள் உண்டாயின. வட சொற்களும் புகுந்தன. இராவுத்தர், சலாம், சபாசு என்னும் பிற மொழிச் சொற்களும் இலக்கியத்தில் ஏறின.

மற்றும் அரேபியம், இந்துஸ்தானி, பாரசீகம், போர்ச்சுகீசியம், ஆங்கிலம் முதலிய மொழிகளிலிருந்து தமிழ் மக்களின் பேச்சு வழக்கில் கலந்துள்ள சொற்கள் நூற்றுக்கணக்காய் உள்ளன.

ஆனால், அவை எல்லாம் உரையாடல்களிலும், ஆவணம் முதலியவற்றிலுமன்றி இலக்கியங்களில் ஏறிற்றில.

இவ்வாறு காலத்திற்கு ஏற்ற மாறுதல்களைக் கொண்டு தமிழ்மொழி வளர்ந்துள்ளது என்பதை அறியலாம்.

**11. தமிழன்னையை ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் 'உன் சீரிளமைத்திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே' எனப் பாராட்டக் காரணம் என்ன ?**

தமிழின் வழி மொழிகளாகிய கன்னடம், தெலுங்கு, துளு, மலையாளம் என்பன வடவெழுத்துகளையும், வட சொற்களையும், வடமொழி விதிகளையும் வரம்பின்றி ஏற்றுத் தம் பழைய வடிவினை இழந்து நிற்றல் போலத் தமிழ் தனது தூய வடிவினை இழந்திலது.

இங்ஙனம் தமிழ் நங்கை காலத்திற்கேற்ற புதிய பணிகளைப் புனைந்தும், தன் இயற்கை எழிலும் பண்பும் சிதையாமல் நடந்தும் வருதலினாலேயே கன்னி எனப்படுகின்றாள். ஆகவே, ஆசிரியர் சுந்தரம் பிள்ளை உன் சீரிளமைத் திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே! எனப் பாராட்டுகின்றார்.

## 12. பிறமொழிச் சொற்களைத் தமிழில் வழங்கு மிடத்துக் கவனிக்க வேண்டுவன யாவை?

1. பிற மொழிச் சொற்களை எடுத்துக் கொள்வது குற்றமன்றாயினும், அவற்றை வரம்பின்றிப் புகுத்து வதானது தமிழின் தூய்மையையும், அழகையும் சிதைத்து, அதன்தொன்று தொட்ட மாண்பினைக் கெடுப்பதாகும் என்பதனைக் கருத்தில் இருத்துதல் வேண்டும்.

2. இக்காலத்துப் புதிய கலைகள் பலவும் எழுதற்குச் சொற்கள் பலவேண்டுமென்பது உண்மையாயினும், அதன் பொருட்டுத் தமிழினைத் துருவி ஆராய்ந்து வேண் டுஞ் சொற்களைக் காண்டலும், அவை போதா விடத்துத் தமிழ்ப் பகுதியினின்று புதிய சொற்களை ஆக்கிக் கொள்ளு தலுமே அறிவும் ஊக்கமும் முயற்சியும் உடையார்க்கு அழகாவனவாம். அந்நெறியே கலைப்பயிற்சியை எளி தாக்குவதுமாம்.

3. பிற மொழிச் சொற்களை இரவல் வாங்குமிடத்து அவற்றைத் தமிழ் இயல்பினுக்கேற்ற ஓசையினவாகத் திரித்துக் கொள்ளுதல் ஆன்றோர் கைக்கொண்ட நெறி யாகும்.

கல்வியிற் பெரியவராகிய கம்பர், 'இலக்குவன், வீடணன்' என்று இவ்வாறு வட சொல்லுருவினைத் தமிழ் இயல்புக்கேற்ப மாற்றியுள்ளமை காண்க.

கிருஸ்துவ வேதப் புத்தகத்தை மொழி பெயர்த்தோர் இயேசு, யோவான், யாக்கோபு என்றிங்ஙனம் தமிழ் இயல்புக்கேற்ப சொற்களைத் திருத்தியமையால் அதன் பயிற்சிக்குக் குறை உண்டாயிற்று இல்லை. ஒவ்வொரு மொழியிலும் இவ்வியல்பு காணப்படும். ஆகவே, பிற மொழிகளிலுள்ளவாறே அச்சொற்களைத் தமிழில் வழங்க வேண்டுமென்பது நேர்மையாகாது.

## 2. கவிஞர் தாகூரின் வாழ்க்கைக் குறிப்புகள்

(டாக்டர் மு. வரதராசனுர்)

### 1. இந்தியா உலகப் புகழ் பெறுவதற்குக் காரணம் யாது ?

இந்தியா உலகப் புகழ் பெறுவதற்குக் காரணம், தாஜ்மஹால் போன்ற சிறந்த கட்டடங்கள் மட்டுமல்ல; இமைய மலேயும், கங்கையாறும், சென்னேக் கடற்கரையும் போன்ற இயற்கைப் பெருமைகள் மட்டுமல்ல; பல நூற்ருண்டுகளாக இந்த மண்ணில் பிறந்து வளர்ந்து புகழ் ஒளி பரப்பிவரும் பெருமக்களே முதற் காரணம் ஆவார்கள்.

உண்மையை ஆராய்ந்தால், இயற்கைப் பெருமைகளும், செயற்கைச் சிறப்புகளுமான மலே, கட்டடம் முதலியவற்றைவிட, அழியாப் புகழைத் தேடித் தருகின்றவர்கள் இப்பெருமக்களே ஆவார்கள்.

### 2. இரவீந்திரர் பிறப்பு, குழந்தைப் பருவம் ஆகியவற்றைப்பற்றி விவரிக்க.

பிறப்பு: கல்கத்தா நகரில் தாகூர் என்னும் பெயருடைய செல்வாக்கான குடியில் 1861ஆம் ஆண்டில் இரவீந்திரநாத தாகூர் பிறந்தார். அவர் தந்தையாரான தேவேந்திரநாத தாகூருக்கு 14ஆம் குழந்தையாக கடைசி மைந்தராய்ப் பிறந்தவர் இரவீந்திரர்.

குழந்தைப் பருவம்: தந்தையார் தேவேந்திரநாத தாகூர், ஆடம்பரத்தை வெறுத்தவர்; ஆகையால், தம் மக்களேயும் எளிய முறையில் வளர்த்து வந்தார்.

இரவீந்திரரும் விளேயாட்டுப் பொருள்களேப் பெருக்கிக் கொண்டு ஆடம்பர சூழ்நிலேயில் வளரவில்லே; விளேயாட்டுக்கு உரியவற்றைத் தாமே படைத்துக்கொண்டு கற்பனே உலகில் பெரும் பொழுது போக்கி வளர்ந்தார். தந்தையாரின் ஏற்பாடு இவ்வாறு நன்மையாகவே முடிந்தது. அக் குழந்தை வெளியுலகமும் நன்ருகத்

தெரியாதபடி, பெரும்பான்மையான நாள்களைத் தோட்டத்திலும், முற்றத்திலும் விளையாடிக் கழிக்க நேர்ந்தது. வீட்டு வாயிலில் நின்றுகொண்டே தெருக்களில் வருவார் போவாரையும், ஓடும் ஊர்திகளையும் கண்டதே இரவீந்திரர் குழந்தையாய்இருந்து உலகைக் கண்ட காட்சி.

## 3. இரவீந்திரர் கற்பனை உலகில் எவ்வாறு மூழ்கித் திளைத்தார் ?

அன்னை, அத்தை, கணக்கெழுதுவோர், ஏவலர் ஆகியோர் இரவீந்திரருக்குக் கதைகளைக் கூறி வந்தனர். அவர்கள் கூறிய கதைகளெல்லாம் காட்சி, காட்சியாக இரவீந்திரரின் மனக் கண்ணில் வந்து மறையும். தாழ்வாரத்தில் ஒரு பக்கம் பயன்படாமல் கிடந்த பழைய பல்லக்கொன்றும் இதற்குத் துணை செய்தது. இரவீந்திரர் அதனுள் உட்கார்ந்து கதவை மூடிக்கொள்வார். உடனே அவரது கற்பனையில் அந்தப் பல்லக்கு ஊர் ஊராகக் காடு காடாகப் பாலைவனமெல்லாம் கடந்து செல்லும். உள்ளே இருந்த சிறுவரோ, பெரிய அரசராய் மாறிவிடுவார். அவரது கற்பனையில் கடந்து செல்ல வேண்டிய ஆறு குறுக்கே வருமானல், அதே பல்லக்கு, பல்லக்காய் இராமல், அழகான தெப்பமாய் மாறிவிடும்.

இவ்வாறு இரவீந்திரர் கற்பனை உலகில் மூழ்கித் திளைத்தார்.

## 4. இரவீந்திரரின் கற்பனைப் பள்ளிக்கூடத்தைப் பற்றி எழுதுக.

இரவீந்திரரின் கற்பனைப் பள்ளிக்கூடம் தாழ்வாரத்தில் நடைபெறும். அந்தக் கற்பனைப் பள்ளிக்கூடத்தில் அவரே ஆசிரியர். ஆசிரியத் தொழிலுக்கு அடையாளமாகச் சிறுவர் இரவீந்திரரின் கையில் ஒரு கோல் எப்போதும் விளங்கும். கோல் இல்லாமல் ஆசிரியரைக் கற்பனை செய்ய அவரால் இயலவில்லை. ஆனல், அவர் வளர்ந்து கவிஞராகிப் பள்ளிக்கூடம் அமைத்துத் தொண்டு செய்த காலத்தில் முதலில் நீக்கியது இந்தக் கோலையே.

### 5. இரவீந்திரரின் கவித்திறனைப் பள்ளியாசிரியர் எவ்வாறு பாராட்டினார்?

பள்ளித் தலைமையாசிரியர், இரவீந்திரரின் பாட்டு எழுதும் பயிற்சியைக் கேள்வியுற்றார். ஒருநாள் இரவீந்திரரை அழைத்து, "என்ன அப்பா, நீ பாட்டு எழுதுவாயாமே! இதோ, இந்தப் பொருளைப் பற்றி ஒரு பாட்டு எழுது, என்று சொன்னார். மறுநாளே அந்தப் பாட்டை எழுதி முடித்து இரவீந்திரர் வகுப்பில் எல்லாரும் அறியப் படித்துக் காட்டினார். ஆனால், இரவீந்திரர் அதை எழுதி இருக்க இயலும் என்று உடனிருந்த பிள்ளைகள் நம்பவில்லை. ஏதாவது புத்தகத்தைப் பார்த்து எழுதிக்கொண்டு வந்த பாட்டாய் இருக்குமென்று சொன்னார்கள். அவரது கவித்திறனை ஆசிரியர் உணர்ந்து போற்றினார்.

### 6. இரவீந்திரருக்கு வெளியுலக அனுபவம் எவ்வாறு எப்போது கிட்டியது?

இரவீந்திரர் இளமையில் வீட்டினுள்ளும் பள்ளிக் கூடத்திலும் அடைபட்டுக் காலம் கழித்தமையால், இரயில் பயணமே தெரியாதவராய் வளர்ந்து வந்தார். ஒரு முறை அவர் தந்தையார் அவரைப் போல்பூருக்கும், அங்கிருந்து இமயமலைச் சாரலுக்கும் வருமாறு அழைத்தார். போல்பூருக்குப் பயணமான போதுதான் இரவீந்திரர் முதன் முதல் இரயில் அனுபவம் பெற்றார். அவருடைய தமையனார் 'சத்தியா' என்பவர் இரயில் பயணத்தைப் பற்றி இல்லாதவற்றையெல்லாம் சொல்லி அவரைப் பயப்படச் செய்திருந்தார். ஆனால், போல்பூர்ப் பயணத்தில் இரவீந்திரர் உண்மையை உணர்ந்து கொண்டார்; இரயில் பயணம் விரும்பத்தக்கதாயும் இன்பமாயும் இருந்ததை உணர்ந்து மகிழ்ந்தார்.

### 7. 'வங்காளஷெல்லி' என்ற சிறப்பு இரவீந்திரருக்கு எப்போது கிட்டியது?

கல்கத்தாவிற்குச் சிறிது தொலைவில் கங்கைக் கரையில் அமைந்திருந்த சந்திர நாகூர் என்னும் ஊரில் தம் தமையனார் ஒருவரின் குடும்பம் இருந்தபோது இரவீந்திரர் அங்கே சென்று அவர்களுடன் தங்கியிருந்து, கங்கையின்

பெருமிதத்தையும் வனப்பையும் கண்ணாரப் பருகினார். அப்போது அவர் பாடிய பாடல்கள் பல. அவற்றை யெல்லாம் தொகுத்து, 'மாலைப் பாடல்கள்' என்னும் தலைப்புடன் நூலாக்கி, அவர் வெளியிட்டார். அதனால் 'வங்காள ஷெல்லி' என்று அறிந்தோர் புகழும் நிலைமை உற்றார்.

### 8. இரவீந்திரரின் கலைத்தொண்டைப் பாராட்டியவர் யார்? ஏன்?

இரவீந்திரரின் கலைத்தொண்டைப் பாராட்டியவர், வங்காள நாவலாசிரியரான பங்கிம் சந்திர சட்டர்ஜி என்பவராவார்.

ஒருமுறை திருமணம் நடைபெற்ற வீட்டிற்கு வங்காள நாவலாசிரியரான பங்கிம் சந்திர சட்டர்ஜி என்பவர் வந்தார். அந்த வீட்டார் அவரை வரவேற்பதற்காக மாலை எடுத்துக்கொண்டு வந்து எதிர்ப்பட்டார். அந்த நேரத்தில் இரவீந்திரரும் அங்கே வந்து வீட்டிற்குள் நுழைய இருந்தார். தம் கழுத்தில் விழ இருந்த மாலையைச் சட்டர்ஜி தம் கையில் வாங்கிக் கொண்டு, இரவீந்திரரின் கழுத்தில் அணிந்து "இவரே இதற்கு மிகவும் தகுதியானவர். நீங்கள் 'மாலைப்பாடல்கள்' என்ற இவரது நூலைப் படித்ததில்லையா?" என்று கேட்டு, அவரையும் அவரது கலைத்தொண்டையும் பலரும் அறியப் போற்றினார்.

### 9. 'இரவீந்திரர் ஆங்கில மோகத்தை வெறுத்தவர்' என்பதைச் சான்று காட்டி விளக்குக.

வங்காள மக்களுக்கு இருந்த ஆங்கில மோகத்தைப் போக்கியதில் கவிஞர் இரவீந்திரர் பெருந்தொண்டு ஆற்றினார் என்று கூற வேண்டும்.

1. பள்ளிகளில் ஆங்கிலம் வாயிலாகப் பாடங்களைக் கற்பித்து வருதலை மிகமிக வன்மையாகக் கண்டித்தவர் அவர்;

2. தாய்மொழி வாயிலாகவே அறிவை வளர்க்க வேண்டும் என்பதை அவர் மிக உறுதியாக எடுத்துரைத்து வந்தார்;

3. கூட்டங்களில் ஆங்கிலத்தில் பேசும் பழக்கத்தை விட வேண்டும் என்றார் ;

4. தாமே முதலில் முன் வந்து வங்காளியில் பேசி, தாய்மொழியில் பேசப் பெருமை கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தினர்.

5. பல்கலைக் கழகத்துப் பட்டமளிப்புச் சொற்பொழிவுகளை ஆங்கிலத்தில் நிகழ்த்துவதே அக்காலத்தில் உயர்ந்த நாகரிகமாய் இருந்து வந்தது. அது நாகரிகம் அன்று என்பதைச் சொல்லாற் சுட்டாமல், செயலால் அறிவித்தவர் கவிஞரே. பல்கலைக் கழகம் அவரை அழைத்துப் பட்டமளிப்புப் பேச்சு நிகழ்த்தக் கேட்ட போது, அவர் வங்காளியிலேயே பேசினர்.

## 10. 'குழந்தைகளிடத்தில் கவியரசர் அன்பு கொண்டவர்' என்பதைப் புலப்படுத்துக.

கவியரசர் இரவீந்திரரது உள்ளத்தின் ஆழத்தில் குழந்தைகளிடம் தனியான அன்பு நிலவியது. குழந்தைகளைப் பற்றிப் பாடிய கவிஞர்களைப் பற்றி ஆராய்ந்தால், உலகத்திலேயே இரவீந்திரநாத தாகூருக்கே சிறப்பிடம் உண்டு எனலாம். அவருடைய பாடல்களில் மட்டும் அல்லாமல், அவரது வாழ்விலும் அன்பு மிக்கிருந்தது. குழந்தைகள் பெற்றுள்ள உள்ளத்தின் திறனும் உயிரின் உணர்வும் நன்கு பயன்பட்டுச் சிறப்புறும் என்பது அவருடைய நம்பிக்கை.

## 11. கவியரசர் ஆடம்பர வாழ்க்கையை வெறுத்தார் என்பது எதனுல் விளங்குகிறது ?

இரவீந்திரர் ஆடம்பரத்தை வெறுத்தவர். தூய்மையும் அழகுமே அவரது உள்ளத்தைக் கவர்ந்தன. ஆனல், அவற்றிற்காக ஆடம்பரத்தை அவர் நாடியதில்லை.

தம் மனைவியார் குழந்தைகளுக்கு விலை உயர்ந்த துணிமணிகளை வாங்க முயன்றபோது தடுத்தார்.

செல்வக் குடும்பத்திற் பிறந்து வளர்ந்த அந்த அம்மையாரும், கணவரின் குறிக்கோளை உணர்ந்து, அவ்வாறே நடந்தார். தாம் ஒரு நகை மூட்டையாய்த் தோன்ருமல்,

நகைகளை மூட்டை கட்டித் தனியே வைத்துவிட்டு, எளிய அழகிய கோலத்தோடு வாழ்ந்தார். அதுவே அந்த அம்மையாரின் இயல்பான பண்பாகிவிட்டது.

பெண்களுக்கு ஏராளமாகத் தட்டுமுட்டுச் சாமான்களைச் சேர்த்துக் கொள்வதிலும் ஓர் இடத்திலிருந்து வேறு இடத்திற்குச் செல்லும்போது அவற்றை எடுத்துச் செல்வதிலும் ஆசை இயல்பாக உண்டு. இரவீந்திரருக்கோ, அதில் எப்போதும் வெறுப்பே உண்டு. "உடுத்துக் கொள்ள ஆடை இரண்டு இருந்தால் போதுமே! இவையெல்லாம் ஏன்?" என்பது அவர் அடிக்கடிக் கூறி வந்த அறிவுரை.

'சாந்தி நிகேதன'த்திலும் கவிஞர் இரவீந்திரர் மற்றவர்களைப்போலக் குடிசை அமைத்து வாழவே முயன்றார்; மற்றவர்களைப்போல எளிய உணவே உண்டு வாழ்க்கை நடத்த முயன்றார்.

## 12. கவியரசருக்கு அவர் தந்தையார் ஏன் பரிசளித்தார்?

கவியரசரின் தந்தையார் தேவேந்திர நாதர், மிக்க மூப்பு அடைந்து தளர்ந்தபோது இரவீந்திரர் தம் காலத்தைப் பெரும்பாலும் வழி பாட்டிலும் தியானத்திலுமே கழித்தார். அப்போது அடிக்கடி தந்தையாரிடம் சென்று அமர்ந்து, கடவுளைப் பற்றித் தாம்பாடிய 'நைவேத்தியம்' என்ற நூலிலிருந்து பாடல் பலவற்றைப் பாடித் தந்தையாருக்குப் பெரிய ஆறுதலாய் விளங்கினார். தேவேந்திரருக்கு இதுமிக்க மகிழ்ச்சியாய் இருந்தது. அவர்தம் மைந்தர் உண்மையான முறையில் கடவுளைப் பற்றிய உணர்வைப் பெற்று விட்டதை அறிந்து களித்தார்.

ஒருநாள் தம் மைந்தரைப் பார்த்து, "பழங்காலத்தில் இப்படிப் பாடுகின்ற கவிஞருக்கு மன்னர்கள் பரிசளித்து மகிழ்வார்கள். இப்போது அவ்வாறு செய்பவர் இல்லை. ஆகையால், நானே ஏதாவது செய்ய வேண்டும்" என்று கூறி, பெருந்தொகை ஒன்றை எடுத்து மைந்தர் கையிற் கொடுத்தார். அஃது அந்த நூலை அச்சிட்டு வெளியிடக் கவிஞருக்கு உதவியது.

### 13. கவியரசரின் சமூகத்தொண்டை விளக்குக.

நாட்டு மக்களுக்குத் துன்பம் நேர்ந்த போதெல்லாம் கவிஞர் தாகூர் இரவு பகலாக உழைத்துத் தொண்டாற்றினர். அவரது வாழ்நாள் முழுவதும் இந்த நல்ல இயல்பு காணப்பட்டது.

முதன் முதலாக அவர் நாட்டுத் தொண்டில் ஈடுபட்டது 1889ஆம் ஆண்டில் கல்கத்தாவில் 'பிளேகு' என்னும் தொற்று நோய் பரவிய போதுதான். தாகூர் அப்போது பொருள் திரட்டித் துன்பம் தீர்க்கும் பணியில் ஈடுபட்டார்.

வங்காளத்தில் அடிக்கடி நேர்ந்து வந்த வெள்ளத்தின் கொடுமையைத் தணிப்பதற்காகவும் அவர் அவ்வப்போது அளவற்ற தொண்டு புரிந்தார்.

பஞ்சம் வந்தபோது முன்னின்று பலரைக் காப்பாற்றினர்.

நிலநடுக்கம் காரணமாகப் பீகாரும், குவெட்டாவும் சொல்லொணுத் துன்பத்துக்கு உட்பட்ட போது கவிஞர் மேற்கொண்ட முயற்சி மறக்க இயலாது.

### 14. 'சாந்தி நிகேதன்' நிறுவிய கவியரசர் அதன் வளர்ச்சிக்கு எவ்வாறு உழைத்தார்?

தாகூர் 1918ஆம் ஆண்டில் 'சாந்தி நிகேதன'த்தில் 'விசுவபாரதி' என்ற உலகப் பொது நிலையத்தை அமைத்தார். அதனை வளர்க்கும் பொருட்டுத் தமது முதுமையிலும் பலநாடுகளுக்கும், இந்தியாவிலேயே பல மாநிலங்களுக்கும் ஓய்வில்லாமல் சென்று உழைக்க வேண்டியதாயிற்று. விசுவபாரதியை அவரது ஆவலின்படி வளர்ப்பதற்கு வேண்டிய பொருள் வளம் இல்லாத குறையால் தான் இவ்வாறு உழைக்க நேர்ந்தது.

1936ஆம் ஆண்டில் தாகூர் டில்லிக்குச் சென்றிருந்த காலத்தில் அங்கே காந்தியடிகள் அவரைக் கண்டு அளவளாவியபோது, 'எழுபத்தைந்தாம் வயதில் இந்த நாட்டுப் பெருங்கவிஞர்—உலகப் பெருங்கவிஞர் இவ்வாறு பொருள் திரட்டி உழைக்க வேண்டியதாயிற்றே!' என்று வருந்தினர்.

'இந்த நாடு இப்படிப்பட்ட நிலையில் உள்ளதே!' என்று வருந்திய அளவில் காந்தியடிகள் நிற்கவில்லை. அப்போதே தாகூரின் கையில் அறுபதினாயிரம் ரூபாய் தருமாறு செல்வர் ஒருவரைத் தூண்டினார். அதைப் பெற்றுக் கவலையில்லாமல் கவிஞர் சாந்தி நிகேதனத் திற்குத் திரும்பவேண்டும் என்று காந்தியடிகள் ஏற்பாடு செய்து அனுப்பினர்.

### 15. கவியரசர், மாணவர்கள் அரசியலில் ஈடுபடு வதை எங்ஙனம் கண்டித்தார்?

காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கி வழக்கறிஞர் முதல் மாணவர் வரையில் எல்லா ரையும் போராட்டத்திற்கு முன்வருமாறு அழைத்தபோது, தாகூரின் மனம் வருந்தியது. மாணவர்கள் ஒத்துழை யாமை இயக்கத்தில் சேர்ந்து கல்லூரிகளை விட்டு வெளி யேறிப் போராடுவதை அவர் வெறுத்தார். கடிந்து அறிவுரையும் கூறினர். அதற்காக மாணவர் உலகம் அவரைப் பழித்தது. அவர் காந்தியடிகளின் முறையை வெறுத்தாரே அல்லாமல், அடிகளைச் சிறிதும் வெறுக்க வில்லை. அவரது தன்னலமற்ற தியாக வாழ்வைப் போற்றிப் பாராட்டினர். அவருடைய தூய வாழ்க்கை யையும், அறநெறியையும் மிகப் போற்றுவதற்கு அறிகுறி யாக அவருக்கு 'மகாத்மா' என்ற பட்டம் சூட்டி உலகறியப் புகழ்ந்தார்.

## 3. உலக உத்தமர் காந்தியடிகள்

(பேரறிஞர் அண்ணா)

### 1. காந்தியடிகளை மக்கள் எவ்வாறு பாராட்டு கின்றனர்?

மக்கள் காந்தியடிகளைத் தம் மார்க்கத்தின் மாசு துடைத்திட வந்த தூயவர் என்றும், நாட்டு அடிமைத் தளையை உடைத்தெறிய அஞ்சா நெஞ்சத்தோடு போரிட்ட விடுதலை வீரர் என்றும், பழைய தத்துவங்கள் பலவற்றிற்குப் புதிய விளக்கம் தந்த வேதாந்தி என்றும்,

ஏழை பங்காளராயிருந்து அவர்கள் புதுவாழ்வு பெற வழி வகுத்த சமதர்மவாதி என்றும் கிராம ராச்சியம் அமைத்திட முனைந்தவர் என்றும் பலவாருகப் பாராட்டுகின்றனர்.

**2. அவரை எவ்வாறு கணிக்க வேண்டும் என்று அண்ணு கூறுகிருர்?**

பலதுறையினராலும் பலபடியாகக் காந்தியடிகள் பாராட்டப்படுவதனுல் அவர் தனி மனிதர் என்ற முறையிலே மட்டும் கவனிக்க வேண்டுபவர் அல்லர் என்றும், அவர் காலத்தின் சின்னமாகவும், ஓர் எழுச்சியின் அடையாளமாகவும், ஒரு மறுமலர்ச்சியின் உருவகமாகவும் கணிக்கப்பட வேண்டியவர் என்று அண்ணு கூறுகிருர்.

**3. காந்தியடிகளின் பிறந்த நாள் எல்லாத் துறையினராலும் கொண்டாடப்படக் காரணம் என்ன?**

பல்வேறு துறையினரும் தமக்காகவே காந்தியடிகள் வாழ்ந்ததாகவும், பணி புரிந்ததாகவும் கூறத்தக்க வகையிலேயே அவரது வாழ்வும் தொண்டும் அமைந்திருந்ததால் அவரது பிறந்த நாள் பல துறையினராலும் கொண்டாடப்பட்டு வருகிறது.

**4. 'அடிகளார் வாழ்ந்த காலம் நாட்டுக்குக் கிடைத்த நற்காலம்' என்ற சிறப்புப் பெறக் காரணம் என்ன?**

ஒரு நாட்டின் முன்னேற்றம், ஏதோ ஒரு துறையிலே மட்டும் பெறப்படுகிற வெற்றியைப் பொறுத்தது அன்று. எல்லாத் துறைகளிலும் வெற்றி காண வேண்டும். அவற்றின் ஒட்டு மொத்தத்தைக் கொண்டே, அந்நாடு முன்னேற்றம் அடைந்திருக்கிறதா என்று கணக்குப் பார்க்க வேண்டும். ஒரு நாட்டின் வரலாற்றிலே அவ்விதமான ஒரு கணக்கு அடிக்கடி கிட்டாது. ஒரு நூற்ருண்டுக்கு ஒரு முறை கிட்டும் என்றும் கூறிவிட இயலாது. அந்தக் கணக்கு இந்நாட்டுக்குக் காந்தியடிகளின் வடிவத்திலே கிட்டியது. எனவேதான், இந்நாள் ஒரு மாபெரும் தலைவரின் பிறந்த நாளாக மட்டுமின்றி, ஒரு நாட்டுக்குக் கிடைத்த 'நற்காலம்' என்ற முறையிலும் சிறப்புப் பெறுகிறது.

5. காந்தியடிகளின் பிறந்த நாள் எவ்வாறு கொண்டாடப்படவேண்டும்?

பெரியோர்களின் பிறந்த நாளை ஆடம்பரமாகக் கொண்டாடுவதோடு நிறுத்திக்கொண்டு அவர்கள் காட்டிய நெறியைக் கடைப் பிடிக்காதிருப்பதால் பயனில்லை என்றும், நடத்தப்படுகின்ற திருநாளின் மாண்பு பின் வரும் நாட்களிலும், எண்ணத்திலும், செயலிலும் இடம் பெறவேண்டும் என்றும், அவர் வழியிலே நடக்கவும், அவர் காணவிரும்பியதைக் காணவும், அவர் தந்து சென்றதை உருக்குலைக்காதிருக்கவும், அவர் ஊட்டிய உணர்ச்சிகளை உயிருள்ளதாகச் செய்யவும் உறுதி பூணும் நாளாக அந்நாள் அமைய வேண்டுமென்றும் காந்தியடிகள் பிறந்த நாள் கொண்டாட வேண்டிய முறை பற்றி அண்ணு குறிப்பிடுகிருர்.

6. அடிகள் சாதித்த அற்புதத்தை அறிஞர் அண்ணு எவ்வாறு விளக்கியுள்ளார்?

காந்தியடிகள் ஊமைகளாய்க்கிடந்த மக்களைப் பேசச் செய்து உரிமை முழக்கமிடச் செய்தார். படைபல வந்தாலும், தடை பல நேர்ந்தாலும் அஞ்சாதிருக்குமாறு அறிவுறுத்தினர். அச்சத்தைத் துடைத்து, ஆயுதம் தாங்கியவர் எதிரில் அணிவகுத்து நிற்கும்படிச் செய்தார். எளிய குடில் அமைத்து அன்பினை ஊட்டி ‘நாமிருக்கும் நாடு நமதென்பறிந்தோம்’ என்னும் உறுதி எழச் செய்தார். கோடானுகோடி மக்களுக்கு மானமுள்ள வாழ்வு பெற்றுத் தந்தமையே அவர் செய்த மாபெரும் அற்புதம். இவ்வாருகக் காந்தியடிகள் செய்த அற்புதத்தை அண்ணு விளக்குகிருர்.

7. காந்தியடிகட்கு முன்னிருந்த இந்தியாவை அண்ணு எவ்வாறு படம் பிடித்துக் காட்டுகிருர்?

பதினரும் நூற்ருண்டில் அந்நியர் இந்தியா என்ற ஒரு நாடு உள்ளது என்றும், அது ஏலம், கிராம்பு, முதலிய பொருள்கள் விளையும் இடம் என்றும், அங்குள்ள மக்கள் வாழத் தெரியாதவர் என்றும் மட்டுமே இந்தியாவைப் பற்றி அறிந்திருந்தனர். ஆங்கிலேயர்கள் இந்தியாவைக் கைப்பற்றிய பிறகு இந்தியா அவர்களது

வர்த்தக வேட்டைக்கு ஏற்ற இடம் என்று உலகம் நம்பியது. இவ்வாறாக இந்தியா உலகத்தாரால் எள்ளி நகையாடப்பட்டு வந்தது என்று அண்ணா காந்தி யடிகட்கு முன்னிருந்த இந்தியாவை வருணிக்கிறார்.

## 8. அடிகளின் பொதுநலத் தொண்டின் மாண்பினை விளக்குக.

அடிகளின் பொதுப் பணியிலே கடுமையான ஒரு சொல், நேர்மையற்ற ஒரு செயல், ஒரு சுயநலத் திட்டம் இருந்ததில்லை. அவரது சேவையினால் ஏற்பட்ட செல்வாக்கு, இந்தியாவின் ஒளியையும், ஆசியாவின் புகழையும் நிறத்திமிர் கொண்டு இறுமாந்திருந்த ஐரோப்பிய வல்லரசுகளுக்கும் கிலி உண்டாக்கக் கூடிய அளவிற்குப் பரவிற்று. அவரது மொழியைக் கேட்க வெளிநாட்டு அரசாங்கத் தலைவர்கள் ஓடோடி வந்தார்கள். அவர் மண் குடிசையிலேயே தங்கினார். அது மதிப்பளிக்கக் கூடியது என்று எண்ணினர் மன்னர் மன்னர். இவ்வளவும் அடிகளின் தூய்மையான தொண்டினால் தோன்றியவையே என அண்ணா விளக்குகிறார்.

## 9. சுயராச்சியம் என்பதுபற்றிக் காந்தியடிகளின் கருத்து யாது?

சுயராச்சியம் ஓர் இலட்சியத்துக்கு வாய்ப்பு என்றும், அது ஒரு நாட்டு வரலாற்றிலே பொன்னேடு என்றும், ஆனால், அது கடைசி ஏடு அல்ல என்றும், நாடும் மக்களும் பெறவேண்டிய நிலைக்கு அடிமைத்தனம் தடையாக இருக்கும் என்றும், அத்தகைய தடையை எவ்விலை கொடுத்தேனும் அகற்றியாகவேண்டும் என்றும் காந்தி யடிகள் சுயராச்சியம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

## 10. காந்தியடிகள் காண விரும்பிய இந்தியா எத்தகையது? இன்றைய இந்தியாவின் நிலை என்ன?

காந்தியடிகள் இந்தியாவை சூது, சுரண்டல், வகுப்பு பேதம் ஆகியவை அற்ற மாண்பு மிகு நாடாக்க விரும்பினார். ஆனால், இன்றைய இந்தியாவின் நிலையோ வகுப்புக்

கலவரம், தீண்டாமைக் கொடுமை, வலியோர் எளியோரை வாட்டும் கொடுமை, கவலை சூழ்ந்த கிராமங்கள், அரசியற் சூதாட்டங்கள், சமுதாயச் சதிகள் எல்லாம் நிறைந்து காணப்படுகிறது. இவ்வாறாகக் காந்தியடிகள் காண விரும்பிய இந்தியா குறித்தும், இந்தியாவின் இன்றைய நிலை குறித்தும் அண்ணா குறிப்பிடுகிறார்.

## 11. காந்தியடிகளின் பிறந்த நாட் கொண்டாட்டத்தால் நாம் பெறவேண்டிய பயன் யாது?

காந்தியடிகள் நம்மோடு இருக்கிறார் என்று எண்ண வேண்டும். அவருடைய எண்ணங்கள் மடியவில்லை என்று எண்ணி அவைகளை நம்முடைய இலட்சியமாகக் கொள்ள உறுதி பூணவேண்டும். அவருடைய எண்ணங்களை ஏற்றுக்கொண்டவர் நாம் என்றும், அவர் காண விரும்பிய மாண்பு பிறந்திடப் பணி புரிவோம் என்றும் உறுதி பெறவேண்டும்.

பொய்மையும், கயமையும், கல்லாமையும், இல்லாமையும், சாதிப் பித்தும், வகுப்பு வேறுபாடும் வெருண்டோடும் வண்ணம் தூய்மையும், வாய்மையும், அஞ்சாமையும், பணியாற்றும் தன்மையும், நம்முள் ஒவ்வொருவருக்கும் இந்நாளில் பிறந்திடவேண்டும். இவையே காந்தியடிகள் பிறந்த நாட் கொண்டாட்டத்தால் நாம் பெறவேண்டிய பயன்கள் என அண்ணா குறிப்பிடுகிறார்.

## 12. நேரு, காந்தியடிகளின் இலட்சியமாகக் கூறியது யாது?

"பரம ஏழைகளும் இது தங்கள் நாடு என்று எண்ண வேண்டும். இதன் அமைப்பில் தங்களுக்கு முக்கியத்துவமும், அதிகாரமும் இருக்கின்றன என்று அவர்கள் நினைக்கவேண்டும். மக்களில் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்பது இருக்கக்கூடாது. எல்லா சமூகத்தினரும் இணைந்து வாழவேண்டும். அத்தகைய இந்தியா உருவாகவே நான் பாடுபடுவேன்."

## 4. உணவு நெறி

(திரு. கோ. வில்வபதி)

### 1. உணவுக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பை விளக்குக.

'சுவரை வைத்துக்கொண்டே சித்திரம் எழுத வேண்டும்' என்ற முதுமொழிக்கேற்ப உடலை வலிமை யுடையதாக வைத்துக் கொண்டால்தான் நெடுநாள் வாழ்ந்து செயற்கரிய செயல்களைச் செய்து புகழ் பெற முடியும்.

நாம் உண்ணும் உணவே நமது உடலைப் பேணு கிறது என்பதாலேயே 'உண்டி முதற்றே உணவின் பிண்டம்', 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என மணிமேகலை உணவின் சிறப்பைக் குறிப்பிடுகிறது. உடலின் வளர்ச்சிக்கும் வலிமைக்கும் செயல்படு திறமைக்கும் உண்டி இன்றியமையாதது என்பதாலேயே உடலை 'உணவின் பிண்டம்' என்று கூறுகிறார்.

### 2. உடலோம்பலின் இன்றியமையாமையைத் திருமூலர் எங்ஙனம் விளக்குகிறார்?

உடம்பு அழிந்தால் உயிரும் அழிந்துவிடும் என்றும், மறுமைக்கான மெய்ஞ்ஞானத்தைப் பெற முடியாமற் போகும் என்றும், உடம்பை வளர்க்கும் வழிகளைத் தாம் அறிந்து கொண்டதாகவும், உடம்பை வளர்த்ததால் உயிரை வளர்த்ததாகவும் கூறுவதன் வாயிலாகத் திருமூலர் உடல் ஓம்பலின் இன்றியமையாமையை விளக்குகிறார்.

### 3. 'பசித்துப் புசித்தலே சிறந்த நெறி'— விளக்குக.

பசி என்பது நமது உடலுக்கு உணவு தேவை என்பதை உணர்த்தும் அறிகுறியாகும். முன் உண்ட உணவு நன்கு சீரணிக்கப்பட்ட பிறகே மறுபடி உண்ண வேண்டும். முன் உண்ட உணவு முற்றிலும் சீரணிக்கப் பட்ட பிறகு உண்ணுவதே நெடுநாள் வாழ்விற்கு

வழியாகும் என்றும், சீரணிக்கப்பட்டதை நன்கு உணர்ந்து நன்ருகப் பசியெடுத்த பின் உடல் நலனிற்குகந்த உணவை அளவறிந்து உண்ண வேண்டுமென்றும் திருவள்ளுவர் கூறுகிருர். பசித்த பின் உண்ணும் உணவு எளிதாக இருப்பினும் சுவையுடையதாகவிருக்கும் என்பதாலேயே நமது ஆன்ருேர் 'பசித்துப்புசி' என்றனர்.

## 4. வள்ளுவர் கூறும் உணவு நெறிகள் யாவை?

வள்ளுவர் கீழ்க்கண்ட நான்கு முக்கிய உணவு நெறி களைக் குறிப்பிடுகிருர் :—

1. உண்ட உணவு நன்கு சீரணிக்கப்பட்ட பிறகு உண்ண வேண்டும்.

2. உடலுக்குத் தேவையான அளவை அறிந்து உண்ண வேண்டும்.

3. உடலுக்கு ஊறு பயவாத உணவை உட்கொள்ள வேண்டும்.

4. நன்கு பசியெடுத்த பிறகே உணவை அனுபவித்து உண்ண வேண்டும்.

மேற்கண்ட கருத்துகளை,

" அற்ருல் அளவறிந் துண்க ; அஃதுடம்பு
பெற்ருன் நெடிதுய்க்கு மாறு "

என்ற குறளிலும்

" அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து "

என்ற குறளிலும் குறிப்பிடுகிருர்.

## 5. உடலின் அடிப்படைத் தேவைகள் யாவை?

முதலாவதாக, உடல் வளர்ச்சியுற வேண்டும். அது வெப்பமும், வலிமையும் கொண்டதாய் இருத்தல் வேண்டும். மேலும், உடம்பு தேய்ந்துபோன தன் உறுப்புகளைச் செம்மைப் படுத்தக் கூடியதாயும், புதியன வாக மாற்றக் கூடியனவாகவும் இருப்பதோடு, நல்ல முறையில் இயங்கத்தக்கதாயும் இருத்தல் வேண்டும். இந்நான்கும் உடலின் அடிப்படைத் தேவைகளாகும்.

### 6. கலப்பு உணவு என்பது யாது?

நமது உடல் உறுப்புகளை வளர்க்கவும் இன்றியமையாத சத்துகளாகிய புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, தாது உப்புகள், வைட்டமின், தண்ணீர் ஆகிய யாவும் தகுந்த அளவில் கலந்து அறுவகைச் சுவைகளால் அமைந்த உணவே கலப்பு உணவாகும்.

### 7. உடல் இயங்கத் தேவையான வெப்பம் எவ்வாறு கிட்டுகிறது?

இயந்திரங்களை இயக்க வெப்பம் தேவைப்படுவது போலவே நமது உடலின் இயக்கத்திற்கும் வெப்பம் வேண்டும். அத்தகைய வெப்பம் நமது உணவின் மூலமே பெறப்படுகிறது. நாம் உண்ட உணவு சீரணிக்கப்பட்டபின் அதிலுள்ள சத்துகள் இரத்தத்தால் கிரகிக்கப்பட்டு உடலின் பலபாகங்களிலுமுள்ள உயிரணுக்கட்கு எடுத்துச் செல்லப்படுகிறது. உயிரணுக்களில் உணவுச் சத்துகள் பிராணவாயுவின் உதவியால் எரிந்து வெப்பம் வெளிப்படுகிறது. அவ்வெப்பமே நமது உடலைக் குறிப்பிட்ட வெப்ப நிலையில் வைத்திருப்பதோடு வலிமையும் தருகிறது.

### 8. கடின உழைப்பிற்குப் பிறகும், குளிர் காலத்திலும் மிக்க பசி உண்டாகக் காரணம் என்ன?

நாம் கடினமான வேலை செய்யும்போதும் விளையாடும் போதும் உடலின் உழைப்பு மிகுகிறது. எனவே, அப்போது உடலுக்கு மிகுந்த வெப்பம் வேண்டும். குளிர்காலத்தில் வெப்பக் காலத்தைவிட உடலுக்கு மிகுந்த வெப்பம் வேண்டியுள்ளது. அக்காலங்களில் நம் உடலுக்குத் தேவையான வெப்பத்தை அளிக்கக்கூடிய எரிபொருள் தேவையாய் இருக்கிறது. அவ்வெரிபொருள் உணவின் மூலமே பெறப்படுதலால் கடின உழைப்பிற்குப் பிறகும், குளிர்காலத்திலும் நமக்கு மிகுந்த பசி ஏற்படுகிறது.

### 9. புரதச் சத்தின் பயன்கள் யாவை?

உடல் பருவநிலைக் கேற்றவாறு வளர்ந்து வனப்பும் ஆற்றலும் பெறுமாறு வளர்ச்சியளிப்பது புரதச்

சத்தாகும். உடலுறுப்புகளைக் கட்டுவிக்கும் மூலப் பொருளாகப் புரதச்சத்து விளங்குகிறது. அழிந்துபோகும் உயிரணுக்களை ஈடுசெய்யப் புரதச் சத்து இன்றியமை யாதது. தேய்வடையும் உயிரணுக்களைப் புதுப்பிக்கவும் புரதச் சத்து இன்றியமையாதது.

## 10. நம் உடலுக்குத் தேவையான சத்துப் பொருள் கள் யாவை? அவற்றின் பயன்களைக் கொண்டு அவற்றை எவ்வாறு வகைப்படுத்தலாம்?

நம் உடலுக்குத் தேவையான சத்துப் பொருள்கள் கார்போஹைட்ரேட்டு, கொழுப்பு, புரதம், தாது உப்பு கள், வைட்டமின்கள், தண்ணீர் என்பவை.

அவற்றை இருவகைப் படுத்தலாம். புரதம், தாது உப்புகள், தண்ணீர் என்பவை உடலை வளர்த்துத் தேய்ந்து போன பகுதிகளைப் புதுப்பிக்க உதவுவதால், அவற்றை ‘உடலை வளர்க்கும் சத்துப் பொருள்கள்’ எனலாம். கார்போஹைட்ரேட்டு, கொழுப்பு, வைட்டமின் என்பவை உழைப்பதற்கு ஏற்ற ஆற்றலையும் வெப்பத்தை யும் தருவதால், அவற்றைச் ‘சக்தி தரும் சத்துப் பொருள்கள்’ என்று கூறலாம்.

## 11. உடலோம்பும் உணவு நெறிகள் என்பது பற்றி இருபது வரிகள் எழுதுக.

நாம் உண்ணும் உணவு பலவகை சத்துக்களையும் தரக்கூடியதாக அமையுமாறு கவனித்துக் கொள்ள வேண்டும்.

உடலுக்கு வேண்டுவனவற்றை அறிந்து உண்ணுதல் மட்டும் போதாது; வேண்டாதனவற்றை அறிந்து விலக்கு வதும் மிகவும் இன்றியமையாததாகும்.

நம் உடலுக்கு ஊறுபயக்கும் உணவுப் பழக்கங்கள் நாகரிகம் என்ற பெயரோடு நம் வாழ்வில் புகுந்துவிட்டன. காபி, தேநீர் போன்ற குடிநீர் வகைகளும், நாவிற்குச் சுவைதரும் செயற்கை உணவு வகைகள் பலவும் இன்று மக்கள் வாழ்வை அரித்துக் குலைத்து வருதல் கண்கூடு.

நாவிற்கு அடிமைப் படாமல் இவற்றை எல்லாம் விலக்கி, நம் உடலுக்கு ஏற்ற உணவினை அறிந்து உண்ணப் பழக வேண்டும்.

நம் உடலுக்கு நன்மை தரும் உணவுகளை அறிந்து உண்பதோடு நாம் உண்ணும் உணவு காலத்திற்கும், சூழ்நிலைக்கும், நாம் செய்யும் தொழிலுக்கும், நம் வயதிற்கும் பொருத்தமானதாயும் இருத்தல் வேண்டும். வேனிற் காலத்திற்குரிய உணவு, மழைகாலத்திற்குப் பொருந்தாது. செரிக்கும் தன்மை மிகுந்த இளைஞர்க்குரிய உணவு, முதியவர்க்குப் பொருந்தாது. உடல் வருந்தி உழைக்கும் தொழிலாளர்க்கு ஏற்ற உணவு, மெய்வருந்தாமல் அலுவலகங்களில் பணிபுரியும் அலுவலர்க்கு ஏற்றதாகாது. யார் யாருக்கு எவ்வெவ்வகை உணவு ஏற்றது என்பதனை அறிந்து உண்பதும் உடலோம்பும் முறைகளுள் மிகச் சிறந்ததாகும். இந்த அரிய உண்மையையே நம் பொய்யில் புலவர், 'மாறல்ல துய்க்க துவரப் பசித்து' என்று குறிப்பிட்டார்.

நாம் குறிப்பிட்ட நேரங்களில் உணவு உண்ணும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். உணவு கொள்ளும் வேளைகளிலும் ஒரு நியதி வேண்டும்.

## 5. முடத்தெங்கு (உரையாடல்)

(திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்)

**1. நன்னிலத்துச் சொத்துகள் என்பவை யாவை? அவை ஏன் அங்ஙனம் கூறப்படுகின்றன?**

மரவகைகளுள் மா, பலா, வாழை, கமுகு, தென்னை இவ்வைந்தும் நன்னிலத்துச் சொத்துகள். ஏனெனில், இவை அனைத்தும் நிலத்தின் பெருமையையும் நீரின் சிறப்பையும் எடுத்துக்காட்டும்.

இவற்றுள் தென்னையும் வாழையும் நார் முதல் வேர் வரை உள்ள யாவும் பயனுடைய பொருள்கள் ; இதில் வாழை ஒரு பங்கும் தென்னை இருபங்குமாகப் பலவகைக்கும் பயன்பட்டும், பல்வேறு பொருள்களுக்கு மூலப் பொருள்களாய் இருந்தும் வருகின்றன. ஆகவே, அவை நன்னிலத்துச் சொத்துகள் எனக் கூறப்படுகின்றன.

**2. தென்னை பற்றிய நம் நாட்டுப் பழமொழிகளை எழுதுக.**

'தென்னை வளர்ந்தால் பண்ணை வளரும்' என்பதும், 'தென்னை செழித்தால் மன்னன் செழிப்பான்' என்பதும் தென்னை பற்றிய நம் நாட்டுப் பழமொழிகளாவன.

**3. தோப்பு அழகாய் இருக்கக் காரணம் யாது ?**

தனித்தனி மரங்களுக்கு இல்லாத ஓர் அழகு, அவை ஒன்று சேர்ந்து ஒரு தோப்பாய் அமைந்து விட்டால் அதற்கென்று புதிதாகத் தோன்றிவிடுகிறது.

சேர்ந்து வாழ்கின்ற மக்கள், சேர்ந்து வாழ்கின்ற குடும்பம், சேர்ந்து வாழ்கின்ற சமூகம், சேர்ந்து வாழ்கின்ற மக்களைக் கொண்ட நாடு ஆகிய இவை அனைத்தும் இத்தோப்பைப் போலவே பார்க்கின்ற மக்களின் கண்களுக்குச் செழிப்போடு காணப்படும். சேர்ந்து வாழ்கின்ற நிலையே சிறந்த அழகு என்ற உண்மையைத் தோப்பின் மூலம் அறிகிறோம்.

**4. 'முடத்தெங்கு' என்பது யாது? அது யாரை நினைவூட்டுகிறது ?**

முடத்தெங்கு என்பது வளைந்து நிற்கும் தென்னை மரமாகும். தோப்பில் வளைந்து நிற்கும் தென்னையானது தோப்பின் அழகைக் குலைப்பது போல நாடு, நகரம், வீடு ஆகிய அனைத்திலிருந்தும் வேறுபட்டுக் கோணல் வழியில் செல்பவன் சீரழிந்து சிறப்பிழந்து விடுகிறான். முடத்தெங்கு கூட்டுறவிலிருந்து விலகி நிற்பவர்களை நினைவூட்டுகிறது. ஆகவே, கயவனை முடத்தெங்கோடு ஒப்பிடுவது சாலப் பொருத்தமாகும்.

5. முடத்தெங்கின் நன்றிகெட்ட செயலாவது யாது?

ஒருவன் தன் பிள்ளையைப் போலத் தன் தென்னம் பிள்ளையை எண்ணி வைத்து வளர்த்து நீர் ஊற்றிக் காப்பாற்றி மரமாக்கி விட்டபிறகு, அது பயன் கொடுக்கும் சமயத்தில் வரம்பு கடந்து, வேலிக்கு வெளியே தலையை நீட்டி, வருவார்க்கும் போவார்க்கும் மட்டையையும், பாளையையும், தேங்காயையும், பிறவற்றையும் கொட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அஃது முடத்தெங்கின் நன்றிகெட்ட செயலாகும்.

6. மனிதரிலே முடத்தெங்கு ஆவார் யாவர்?

தன்னைப் பெற்ற தந்தையைத் தளர்ந்த வயதில் தள்ளாட விட்டுவிட்டு மாமனர் வீட்டோடு மகிழ்ந்து வாழும் மகனும்,

பெற்று வளர்த்த தாயைப் புறக்கணித்து விட்டு இடையில் வந்த மனைவியோடு வாழ்வு நடத்தும் மகனும்,

பெற்ற பிள்ளைகளுக்குச் சொத்துக் கொடுக்க மறுத்து அவர்கள்மீது வன்னெஞ்சம் கொண்டு அவர்களை நடுத் தெருவில் அலைய விட்டுத் தம் சொத்துகளைத் தானமும், தருமமும் செய்துவரும் தந்தையரும்,

மருமகனுக்குச் செய்தவைகளை மகனுக்கு இட்டு வயிறு எரியும் தாயும் உண்டானல் அவளும்,

மனிதரிலே முடத்தெங்கு ஆவார்கள்.

7. இருவகைக் குற்றவாளிகள் என ஆசிரியர் யார் யாரைக் குறிப்பிடுகிருர்?

பெற்ற பிள்ளையை வளர்ப்போரும், வைத்த பிள்ளையை (தென்னம் பிள்ளையை) வளர்ப்போரும் இளமையிலேயே சிறிது எச்சரிக்கையாய் இருந்து வளர்த்தால் அவற்றைக் கோணலிலிருந்து திருத்தி நேராக வளர்த்திருக்கலாம். இவர்களே முதற் குற்றவாளிகள்.

அவ்வாறு கண்காணித்து வளர்த்த பிள்ளையைக்கூட மரமேறிகளுள் சிலர் தம் சுயநலங் கருதி இலகுவாய் ஏறி இறங்க எண்ணி மிதித்துச் சாய்த்து வளைத்து விடுவதும்

உண்டு. அதுபோலவே நன்கு வளர்க்கப்பட்ட பிள்ளை களைக்கூட அதனதன் வாழ்க்கையில் ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணும் வளைத்துக் கோணலாக்கி முடத் தெங்காகச் செய்து விடுவதும் உண்டு. இதனால், இந்த மரமேறிகளும் மனையேறிகளும் இரண்டாங் குற்றவாளி கள் ஆகிறார்கள்.

### 8. இளைஞன் தாத்தாவிடம் கூறிய உறுதிமொழி யாது?

தான் முடத்தெங்காக வாழ்வதில்லை என்றும், மற்றவர் களை முடத்தெங்காக வாழவிடுவதில்லை என்றும், தான் முடத்தெங்குகளைத் தோற்றுவிப்பதும் இல்லை என்றும், பேரன் தாத்தாவிடம் உறுதிமொழி கூறினான்.

### 9. தாத்தா தமது ஆசை எனக் கூறியது யாது?

பெற்ற நாட்டிற்குப் பெருமையையும், வளர்த்த மொழிக்கு வாழ்வையும், பிறந்த குடும்பத்திற்குப் பெருஞ் சிறப்பையும் தந்து அனைவரும் நல்ல தமிழராய் நல்வாழ்வு வாழவேண்டும் என்பதே தனது ஆசையாகும் எனத் தாத்தா கூறினார்.

## 6. கொடி நாள்

(திரு. மு. கருணாநிதி)

### 1. "கொடி நாள்" என்ற பாடத்தில் காணப்படும் கருத்துகளைத் தொகுத்து 20 வரிகளில் எழுதுக.

நம் நாட்டு வீரர்கள் தம் கண்ணைக் காப்பதினும் இம் மண்ணைக் காப்பதிலேயே ஆர்வமுடையவர்கள். சுற்றத் தாரை மறந்து வாளேந்திப் போர்க்களம் புகுந்து சுதந்திர மண்ணைக் காத்திட முற்பட்டனர். தம் உயிரைப் பொருட் படுத்தாது போர்க்களம் புகுந்தனர். மரணம் குறித்துக் கவலைப்படாது அணிவகுத்துச் செல்வதைப் பிறந்த பொன்னாட்டுக்குச் செய்யும் கடமையாகக் கருதினர்.

அவ்வீரர் தம் உணர்ச்சியைப் புகழ்வதும் போற்றுவதும் நமக்குப் பெருமை தரும் செய்திகளாகும். வீரருக்கு வணக்கம் செலுத்துவதும், வாழ்த்துவதும், நன்றி செலுத்துவதும் நமது பண்டைய பண்பாடுகள். அக்கடமையை நிறைவேற்றும் நாளே கொடி நாள்.

கொடி நாள் நமது அன்பை, மறைந்த மாவீரர்க்குக் காட்டும் நாள். இந்நாளில் கொடியேற்றி நாம் வழங்கும் காணிக்கை குன்றின் மேலிட்ட விளக்காகும். நமது வாழ்வு, மகிழ்ச்சி, சுதந்திரம், நாட்டுரிமை, பாதுகாப்பு அனைத்திற்கும் பொறுப்பேற்றவர்கள் வீரர்கள். அவர்களுக்கு நன்றி செலுத்த நாம் கடமைப்பட்டுள்ளோம்.

தொல்லை நீக்கி எல்லை காத்த வீரர்கள் அடைந்த துன்பத்திற்கு அளவில்லை. அத்துயர் துடைக்கும் பணியில் நாம் ஒன்றுபடுதல் நம் நாட்டிற்கே செலுத்தும் காணிக்கையாகும். அவர்களை நம்பியிருந்த குடும்பத்தைப் பாதுகாப்பது நமது தலையாய கடமை. அவருள் பலர் விட்டுப் பிரிந்துசென்ற குடும்பத்தைப் பாதுகாத்து அவரை நம்பியிருந்த குழந்தை குட்டிகளின் எதிர்காலம் சிறந்திட ஒவ்வொருவரும் அவரது சக்திக்கேற்பப் பொன்னும் பொருளும் கொடுத்து ஆதரிக்க வேண்டும்.

இவ்வாறு "கொடி நாள்" என்ற தலைப்பில் கலைஞர் கருணாநிதி அவர்கள் நாட்டு மக்களை வேண்டிக் கொள்கிறார்.

## 7. கலைகள்

(திரு. வி. கலியாணசுந்தர முதலியார்)

1. முற்கால இந்தியரின் பண்புகளை விரித்து எழுதுக.

முற்கால இந்தியர் இயற்கை நுட்பத்தை நன்கு தெரிந்தவர். எப்பொழுதும் ஒழுக்கத்தையும் அமைதியையும் விரும்பியவர்; அவற்றை நாட்டிடை நிலைபெறுத்த முயன்றவர். இயற்கை வழிநின்று பண்டைய மக்கள் கல்விபயின்று வந்தமையால் அவர்கள் வாழ்வில் ஒழுக்கமும் அமைதியும் ஒன்றி நின்றன; போராட்டம் புகவில்லை.

2. நம் நாட்டுக் காவியச் சிறப்பை விளக்குக.

காவியக் கலையில் இந்தியா பெயர் பெற்றது. மலை போன்றும் கடல் போன்றும் கணக்கிலடங்காக் காவியங்கள் குவிந்து கிடக்கின்றன. பழைய இந்தியக் கலைஞர்கள் இயற்கைச் சூழலில் வாழ்ந்தவர்கள். அவர்கள் புலன்களும் மனமும் இயற்கையில் ஒன்றியவை. இயற்கை மனத்தினின்றும் சுரந்த பாக்களாதலின் அவை இயற்கைப் பாக்களாகும். காவியத்திற்குக் கால் கொண்டவர் வால்மீகி. அவரது இராமாயணம் காவிய உலகுக்கோர் இலக்கியம்; வாழ்வுக்கு ஓர் எடுத்துக் காட்டு. பழம் பாரதத்தின் உயிரோவியம்; இயற்கை நிலையம்; அறத்தின் உறையுள்; சரித்திரக் கூடம்; காதலின் காதல்; வீரத்தின் வீரம்.

கி.மு. ஆரும் நூற்ருண்டிலேயே தமிழ் இலக்கணங்கள் தோன்றின என்று சரித்திர வல்லுநர் கூறுகின்றனர். அதற்கு முன்னரே இலக்கியங்கள் மலிந்திருத்தல் வேண்டும்.

3. 'இந்தியா ஓர் ஓவியக் கூடமாகும்' எவ்வாறு?

மலைமுடிகளும் ஆற்றணிகளும் பசும் போர்வையும் நீலக்கடலுடையும் கொண்ட அழகிய வடிவமாகத் திகழ்வதால் பாரதமாதாவே ஓர் ஓவியம். தாயின் ஓவிய இயல்பு அவள்தம் மக்களிடத்தே தோன்றுதல் இயல்பாதலின் இந்தியா ஓர் ஓவியக் கூடமாகவே திகழ்கிறது. எல்லோரா ஓவியம் சிறப்பு மிக்கது. அவ்வோவியத்தைக் காண்போர் அஃது தெய்வத்தாலியற்றப்பட்டதோ என ஐயுறுவர். அதனை வடித்த ஓவியரே அது தன்னால் தோற்றுவிக்கப்பட்டதுதானு என வியப்புறும் வண்ணம் அமைந்தது. ஓவியத் தெய்வமே சிற்பியுருக்கொண்டு அதனை அமைத்ததாகவும் கூறுவர். எல்லோரா போன்ற பல அழகோவியங்கள் பாரதமுழுதும் காணக் கிடைக்கின்றன. பழைய இந்தியக் கோவில்களில் உயிர் ஓவியங்கள் பல இன்றும் காட்சியளிக்கின்றன. எனவே, இந்தியா ஓர் ஓவியக்கூடம் என்பது சாலப் பொருந்தும்.

4. நம்நாட்டு இசையின் பெருமையை விளக்குக.

நம்நாட்டு இசைக்கு ஒப்பாகவோ, உயர்வாகவோ வேறு ஒரு நாட்டு இசை இன்றும் தோன்றவில்லை.

இந்திய மக்கள், சரித்திர காலத்திற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இசையின் எல்லையைக் காணும் பேறுபெற்றார்கள்.

நமது நாட்டு இசை, நாத தத்துவத்தினின்றும் தோன்றிய ஒன்றாதலாலும், அத்தத்துவத்திற்கு மேல் வேறு தத்துவம் இன்மையாலும், அதைக் கடந்து சாந்தத் தெய்வம் விளங்குதலாலும் அது தன்னை இசைப்பவரையும் கேட்பவரையும் சாந்தத்தில் திளைக்கச் செய்யும். எத்தனையோ யோகியர் எத்தனையோ யாண்டு தவங் கிடந்தும் அடைய இயலாத சாந்த நிலையை நமது நாட்டு நல்லிசை எளிதில் கூட்டவல்லதெனின், அதன் மாண்பை விவரித்துக் கூறுதல் வேண்டாவாம்.

## 5. நம்நாட்டு மருத்துவக் கலையின் உயர்வை, மேனாட்டு மருத்துவக் கலையுடன் ஒப்பிடுக.

பல்லாண்டுகட்கு முன்னரே இந்தியா மருத்துவக் கலையில் முன்னேறியிருந்தது. இந்திய மருத்துவத்தில் சத்திரமும் மருந்தும் இடம் பெற்றிருக்கின்றன. சத்திர வித்தை இந்தியாவினின்றும் மேல் நாட்டுக்குச் சென்றது என்ற கருத்தைச் செருமானிய மருத்துவ அறிஞர் சிலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்தியாவில் சத்திர சிகிச்சை ஓங்காது ஒழிந்தது. ஆனால் மேல் நாடுகளில் மேலும் மேலும் வளர்ந்து வருகிறது. மருந்தில் மேல் நாடுகள் இந்தியாவுக்கு ஒப்பாகவும் வரவில்லை. தொழுநோய், என்புருக்கி, நீரிழிவு முதலிய பெரு நோய்களைப் போக்க வல்ல மருந்துகள் இன்னும் மேல்நாட்டில் கண்டு பிடிக்கப் படவில்லை. ஆனால் அவற்றிற்கான மருந்துகள் இந் நாளிலும் இந்தியாவில் கிடைக்கக்கூடியவையாக விருக் கின்றன. இவ்வகையில் மேல் நாட்டு மருத்துவத்தி னின்றும் இந்திய மருத்துவம் மேம்பட்டதாக உள்ளது.

## 6. நம்நாட்டுச் சமயக்கலை எவ்வாறு உயர்ந்த தெனப்படும்?

பழங்கால இந்தியரால் சமயக்கலை மிக்க ஊக்கத் துடன் வளர்க்கப்பட்டது.

இயற்கை—உயிர்—இறை ஆகியவற்றின் ஆராய்ச்சியும் தெளிவும் பண்டை இந்தியரிடைச் சமய ஒழுக்கத்தையும் புகச் செய்தன.

சமயம் இந்தியாவின் உயிர், மற்றவை உடல் உறுப்புகள். இந்தியாவின் கல், மண், புல், புழு முதலிய எல்லாம் சமயக் காட்சிகளாய் வழங்கிய காலமுண்டு. இந்தியச் சமயம் உலகுக்கு இமயமாயிற்று; கங்கையாயிற்று. இமயமும் கங்கையும் சமயக் குறிகள்.

சில நாட்டார் தத்துவத்தை வேருகவும், சமயத்தை வேருகவும் பிரித்துக்கொண்டனர். இந்திய முனிவர் இரண்டையும் ஒன்ருகப் பின்னிவிட்டனர். அவர்தம் மூளைகள் சமயத் தத்துவங்களை ஆராய்வதிலேயே பெரிதும் உழைத்தன.

**7. ஆனய நாயனர், கண்ணபிரான் ஆகிய இருவரின் இசைச் சிறப்பை விளக்குக.**

ஆனய நாயனரும், கண்ணபிரானும், இசையிசைத்த போது பலவித விலங்குகளெல்லாம் தங்களை மறந்து ஒன்ருகி, பகை மறந்து இன்பம் நுகர்ந்ததை நமது நாட்டு நூல்களில் காணலாம் என இருவரது இசைச் சிறப்பையும் பற்றிக் கூறியுள்ளார் ஆசிரியர்.

## 8. நாடகக் கலைஞர்

(திரு. ஔவை தி. க. சண்முகம்)

**1. சங்கரதாச சுவாமிகள், எந்தெந்த நாடக சபைகளில் பணியாற்றினர்?**

சங்கரதாச சுவாமிகள் முதன் முதலில் ஒரு நாடக சபையில் நடிகராகவும், ஆசிரியராகவும் இருந்தார். பின்னர் சாமி நாயுடு அவர்களின் நாடக சபையிலும், பிறகு வள்ளி வைத்தியநாதையர், அல்லி பரமேசுவர ஐயர் நாடக சபைகளிலும், அதற்குப் பின் பி. எஸ் வேலு

நாயர் அவர்களின் சண்முகானந்த சபையிலும் பணி யாற்றினர். பின்னர் சமரச சன்மார்க்க நாடக சபை என்ற நாடக சபையைத் தாமே அமைத்து நடத்திவந்தார்.

**2. சங்கரதாச சுவாமிகள் எவ்வெவ் வேடங்களைத் தாங்கி நடித்தார்கள் ?**

சங்கரதாச சுவாமிகள் இரணியன், இராவணன், எமதருமன், நள-தமயந்தியில் சனீசுவரன் முதலிய வேடங் களைத் தாங்கி நடித்தார்கள். சாமி நாயுடு நாடக சபையில் ஆசிரியராக இருந்தபோது சூத்திரதாரராகவும் நடித்தார்.

**3. சங்கரதாச சுவாமிகளின் புலமையை விளக்க இரண்டு சான்றுகள் தருக.**

ஒருநாள் சுவாமிகள் புத்தகக் கடைக்குச் சென்று அபிமன்யு சுந்தரி அம்மானைப் பாடலின் படி ஒன்று வாங்கி வந்தார்; இரவு உணவுக்குப் பின்னர் ஓர் அரிக்கேன் விளக்கை அருகில் வைத்துக்கொண்டு எழுதத் தொடங்கினர். பொழுது விடிவதற்குள் சுவாமிகள் எழுதி முடித்து அமைதியாய் உறங்கிக்கொண் டிருந்தார். அவரது படுக்கையருகே அபிமன்யு நாடகம் மங்களப் பாட்டுடன் முடித்து வைக்கப்பட்டிருந்தது. அதில் ஒரு அடித்தல், திருத்தல்கூட இல்லை. இது அவரது புலமையைக் காட்டும் ஒரு சான்ருகும்.

ஒருமுறை உடுமலை சரபம் முத்துசாமி கவிராயர் அவர்கள், சுவாமிகளை நோக்கி, 'சங்கரதாச சுவாமிகளே, உம்முடைய பாடல்கள் முள்ளும் முருடும் போல இருக் கின்றன' என்ருராம். உடனே சுவாமிகள், சிரித்துக் கொண்டே, "கவிராயர் பாடல்கள் கல்லும் கரடும் போல் இருக்கின்றனவே!" என்ருராம். "முள்ளும் முருடும்,' 'கல்லும் கரடும்' என்பவற்றை மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், முரட்டுத்தனமான பாடல் என்றும், கடின மான பாடல் என்றும்தான் பொருள் தோன்றும். ஆயின், உட்பொருள் அதுவன்று. முள்ளும் முருடும் போல என்பது, 'பலாச்சுளையைப் போல இருக்கிறது' என்றும், கல்லும் கரடும் என்பது 'கற்கண்டைப் போன்றது' என்றும் குறிப்புப் பொருள் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு நயம் தோன்றக் கூறியது அவரது புலமைக்கு மற்ருேர் எடுத்துக்காட்டாகும்.

4. சங்கரதாச சுவாமிகள் எழுதிய நாடக நூல்கள் எவை ?

கோவலன், வள்ளித்திருமணம், பவளக்கொடி, அல்லி அர்ச்சுனு, மணிமேகலே, லவ குசா, சாவித்திரி, பிரகலாதன், சிறுத்தொண்டர், பிரபுலிங்க லீலே, பார்வதி கல்யாணம், வீர அபிமன்யு என்பன அவர் எழுதிய நாடக நூல்களாம்.

5. சங்கரதாச சுவாமிகள், தமிழ் நாடகத் தலேமை யாசிரியர் என்பது எவ்வாறு பொருந்தும் ?

சங்கரதாச சுவாமிகள் நாடகத் தமிழை வளர்த்த தந்தையார் ஆவார். நாடக ஆசிரியர் பலருக்குப் பேராசிரியர். சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு இடையே இவர் பாடல்களேயோ, வசனங்களேயோ, பயன்படுத்தாத நடிக நடிகையர் தமிழ் நாடக உலகில் இல்லேயென்றே சொல்லிவிடலாம். நாடக உலகம், இப்பெரியாரைத் தமிழ் நாடகத் தலேமையாசிரியர் எனப் போற்றியது. எளிமையும், இனிமையும் ததும்பும் பாடல்களாலும், தேன்சொட்டும் தீந்தமிழ் உரைநடைகளாலும் இப்பெரு மகனுர் இயற்றிய இனிய நாடகங்களே, தமிழ் நாடகக் கலே வளர்ச்சிக்கு அடிப்படைச் செல்வம் என்று கூறுதல் மிகையாகாது.

6. சங்கரதாச சுவாமிகளின் வரலாற்றை 20 வரி களில் சுருக்கி எழுதுக.

1867-ஆம் ஆண்டு ஆவணித் திங்கள் 22-ஆம் நாள் தூத்துக்குடியிலே வெள்ளேயத் தேவன் பரம்பரையிலே, வீரமறக் குடியில் தாமோதரக் கணக்கப் பிள்ளேக்குப் புதல் வராய்த் தோன்றினுர் சங்கரதாச சுவாமிகள்.

தந்தையாரிடமும், பழனித் தண்டபாணி சுவாமி களிடமும் தமிழ் கற்றுத் தமது தமிழறிவை வளர்த்துக் கொண்டார்.

சுவாமிகள் உப்புப் பண்டக சாலேயில் சிலகாலம் கணக்கராகப் பணியாற்றினுர். பின்னர் நாடகத் துறையில் நாட்டம் செலுத்தினுர்.

நாடகத்தில் நடிகராகவும் ஆசிரியராகவும் சில ஆண்டுகள் பணியாற்றினார். 'சமரச சன்மார்க்க நாடக சபை' என்ற பெயரில் சுவாமிகள் தாமே ஒரு நாடக சபையையும் சில ஆண்டுகள் நடத்தினார். 1918-ஆம் ஆண்டு 'தத்துவ மீன லோசனி வித்துவ சபா' என்ற நாடகக் குழுவைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராகவும் இருந்தார்.

சுவாமிகள் இணையற்ற தமிழ்ப் புலமை உடையவராக விளங்கினார். நாடகத் துறை சுவாமிகளால் பல நலன்களைப் பெற்றது. புதிய நாடகங்கள் பல இயற்றினார். நாடகத் தந்தையாகிய சுவாமிகள் நாடகத் தலைமையாசிரியராகவும் இருந்தார்.

இவரது புலமைக்குத் தலை வணங்கியவர் பலர். இறுதி வரை திருமணமாகாதவராகவே இருந்து 1922-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 13-ஆம் நாள் திங்கட்கிழமை புதுச்சேரி நகரில் தமது ஊனுடலை நீத்தார். அவரது பெயர் தமிழ் உலகம் உள்ளளவும் மங்காது நின்று ஒளி வீசும்.

## 9. இளங்கோவடிகளின் இரக்கம்

(டாக்டர் திரு. அ. சிதம்பரநாதன்)

**1. கண்ணகிக்கு நேரவிருக்கும் துன்பத்தை முன்னரே உணர்ந்த வையை என்னும் பொய்யாக் குலக்கொடி எவ்வாறு சென்றதாக இளங்கோவடிகள் விளக்கியுள்ளார்?**

ஆற்றினைப் பெண்ணாக்கி, அப்பெண் கண்ணகிக்கு நேரவிருக்கும் கடுந்துயரைக் கருதி இப்போதே முக்காடிட்டு அழுவது போன்ற ஒரு காட்சியை கவிஞர் காண்கிறார். அதனால், ஆற்று வெள்ளத்தில் அடித்துக் கொண்டு வரப்படும் மலர்கள் பரவலாய் இருப்பதை வேறொரு வகையிற் கவிஞர் அழகுபட அமைத்து விடுகிறார். வையை என்ற குலக்கொடி கண்ணகிக்கு வருந்துயரை அறிந்தவள் போல நறும் பூக்களாலான

ஆடையைப் போர்த்துக் கொண்டு, தன் நீரினை மறைத்து அடக்கிக்கொண்டு வந்தவள் போலக் காட்சி அளிப்ப தாகக் கவிஞர் பாடுகிறார்.

'கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கி' என்று கவிஞர் கூறியபொழுது, தன்னிடத்து நிறைந்த ஆழமான நீரைப் பூக்களால் மறைத்து அடக்கிக்கொண்டு சென்றது என்ற சாதாரணப் பொருளை அமைத்துக் கவிஞர் பாடினரா யினும், தன்னுடைய கண்களில் நிறைந்து சொரிந்து கொண்டிருக்கிற நீரினைப் பிறர் அறியாதவாறு மலர் முக்காட்டினால் அவள் மறைத்து அடக்கிக்கொண்டு வருகிறாள் '', என்னும் குறிப்புப் பொருள் தோன்றும்படிப் பாடியுள்ளார். இயல்பாக நடக்கும் நிகழ்ச்சியின் மீது புலவர் தம் கருத்தைச் செலுத்தி நயம்பெறக் கூறியிருத்தல் வியந்து பாராட்டுதற்குரியது.

**2. கண்ணகி காரணமாக இயற்கைப் பொருள் களும் வருந்தின என்பதை இளங்கோவடிகள் எவ்வாறு விளக்கியுள்ளார் ?**

இயற்கைப் பொருள்களும் கண்ணகியின் பொருட்டு வருந்துவதாகக் கவிஞர் கண்ணுக்குத் தோன்றுகிறது. அதனால் குவளையும், ஆம்பலும், கமலமும் காற்று அடிக்க அடிக்க அசைந்தசைந்து ஆடுகின்றன என்ற சாதாரணச் செய்தியைக் கவிஞர் அவையெல்லாம் கண்ணில் நீர் சொரிந்து கால் நடுக்கமுற்று வருந்துகின்றன என்று பொருள்படும்படி அழகுறப்பாடியுள்ளார். கண்ணகிக்கும் அவள் கணவனுக்கும் நேரவிருக்கும் பெருந் துயரத்தை ஐயமில்லாமல் அறிந்தவை போலக் குவளை, ஆம்பல் முதலிய செடிகொடிகள் அசைந்தசைந்து ஆடுகின்றன என்று குறித்துள்ளார்.

**3. இளங்கோவடிகளின் இயற்கைக் காட்சி வருணனை மற்றப் புலவர்களுக்கு முன்னோடி யாய் அமைந்தமையை ஆதாரங்களுடன் 20 வரி களில் விளக்குக.**

கோவலனும் கண்ணகியும் மதுரை நகர வாயிலிற் புகுகின்றபொழுது, "இவ்வூரினுள்ளே வாராதீர்கள்!

வாராதீர்கள் !'' என்று கூறித் திரும்பிப் போங்கள்! திரும்பிப் போங்கள் என்று குறிப்பால் உணர்த்துகின்றன கோட்டை வாயிலில் உள்ள நெடுங்கொடிகள் என்று கவிஞர் கூறுகிறார். கோட்டை வாயிலில் உயர்த்திக் கட்டப்பட்டுள்ள துகிற் கொடிகள் காற்றில் தாமே இப்புறமும் அப்புறமும் அசைந்து கொண்டிருந்த காட்சி கவிஞர்க்கு வேறொரு கருத்தினைப் புலப்படுத்துகிறது. இயற்கையில் அசைந்த கொடியின் அசைவிற்கு ஒரு பொருள் கற்பித்து இளங்கோவடிகள் இவ்விடத்தில் அமைத்துள்ளார் என்பது அறியப்படும்.

பிற்காலத்துக் கவிஞரும் இளங்கோவடிகளைப் போலக் கொடியசைவிற்கு ஒரு பொருள் கற்பித்துக் கூறுவாரா யினர். மிதிலை நகரத்தின் கண்ணே வரும் இராம இலக்கு வரை வருக ! வருக ! எனக் கொடிகள் வரவேற்றன எனக் கம்பர் கூறினர்.

துரியோதனன் கண்ணனைத் தனக்குப் படைத்துணை வரவேண்டுமென்று கேட்கத் துவாரகைக்குச் சென்ற பொழுது துவாரகை வாயிலில் இருந்த கொடிகள், '' ஈண்டு நீ வருவதாற் பயனில்லை, பாண்டவர்கே எங்கள் தலைவன் படைத்துணைவனவான், மீண்டுபோக !'' என்று தடுப்பன போன்று இருந்தன என்று வில்லிபுத்தூரார் பாடினர்.

இவற்றிலிருந்து இளங்கோவடிகளின் இயற்கைக் காட்சி வருணனை மற்றப் புலவர்களுக்கு முன்னோடியாய் அமைந்தமையை அறியலாம்.

### 4. மாதரியிடம் கண்ணகியைக் கவுந்தியடிகள் அடைக்கலப் படுத்தியபொழுது கூறியுள்ள வற்றிலிருந்து இரக்கவுணர்ச்சி புலனவதை விளக்குக (20 வரிகள்)

கவுந்தியடிகள் கண்ணகியை மாதரியிடம் அடைக் கலப் படுத்திய பொழுது அடுத்த நாள் கண்ணகியை நல்ல நீரில் ஆடச்செய்து, அவள் கண்ணுக்கு மைதீட்டி, கூந்தலிலே சில மலர்களிட்டு, புதுத்துணி உடுப்பித்து, அவளுடைய செவிலியும் தோழியும் தாயுமாக நீயேதான் தாங்க வேண்டும்'' என்று கூறும் முறையை எண்ணிப் பார்க்கப் பார்க்கக் கண்ணகி காரணமாக ஏற்படும் இரக்கம் மேலிடுகிறது.

கண்ணகி கணவனோடு பல்லாண்டு இனிது வாழ வேண்டுமென்று கவுந்தியடிகள் கருதுகிறாரென்பது இப் பகுதியால் அறியப்படுகிறது. ஆயினும், அவரது விருப் பத்திற்கும் வாழ்த்துதலுக்கும் மாறாக, கண்ணகி அடுத்த நாள் தன் கணவனையிழந்து கடுந்துயருற இருக்கிறாள் என்பதை நினைக்கும்பொழுது அவளைக் குறித்து எழும் இரக்க உணர்ச்சிக்கு எல்லையில்லை. "தாயும் நீயே ஆகித் தாங்கு" என்ற பகுதி அவ்விரக்க உணர்ச்சியின் உச்ச நிலைக்கு நம்மை இழுத்துச் செல்கின்றது. தாய் போல இருந்து கண்ணகியைக் காப்பாற்ற மாட்டாமற்போனது குறித்து நாளை மாதரி மிக்க கலக்க முறுவாளே என்ற உணர்ச்சி நம்பால் ஏற்படாமல் இருக்கவில்லை.

## 5. கண்ணகியிடம் கவுந்தியடிகள் கொண்டிருந்த உழுவலன்பினை விளக்குக.

ஞாயிற்றின் கொடிய கதிர்களுடைய வெப்பத்தால் கணவன் வருந்துகிறானே என அவனுக்குத்தான் வருந்தி தன் வருத்தத்தை மறைத்துக் கொள்ள முற்பட்டு, அம் முயற்சி வெற்றியுறாது நாப்புலந்து போகும்படி வாட்ட முற்றுத் தனது துயரத்தைச் சிறிதும் பொருட்படுத்தாது சென்று கொண்டிருந்த கண்ணகியின் உழுவலன்பு கவுந்தியடிகளின் உள்ளத்தை ஈர்த்துவிட்டது. அதனால், கண்ணகியைக் 'கற்புக் கடம் பூண்ட தெய்வம்' எனக் கூறி ஏத்துகிறார் அடிகளார். கண்ணகியின் அடிகள் வெப்பத்தாற் கொப்புளித்து அவளை நன்கு நடக்க வொட்டாமல் தடுத்துக் கொண்டிருந்த நேரத்திலும் வெப்பக் கொடுமையைப் பொறுத்துக் கொண்டு அடங்கி, நடந்தமை அடிகளாரது உள்ளத்தை உருக்கி விடுகிறது. அதனால் இப்பெண்ணின் அடிகளுடைய மென்மையை அறிந்து நிலமகள் நெகிழ்ந்து கொடுத்திலளே!" எனக் கவுந்தியடிகள் இரங்குகிறார் என்பது, 'வண்ணச் சீரடி மண்மகள் அறந்திலள்' என்றமையால் அறியப்படும்.

## 6. இளங்கோவடிகள் இரக்க வுணர்ச்சியைத் தெள்ளிதின் விளக்க வல்லவர் என்பதனை ஓர் ஆதாரங்காட்டி விளக்குக.

கோவலனும் கண்ணகியும் புகார் நகரை நீங்கி மதுரையின் மருங்கே சென்று தங்கினர் என்றும்,

விரைவில் மதுரையின் எல்லேக்குட்புக இருக்கின்றன ரென்றும் கூறவேண்டிய இடத்தில் இளங்கோவடிகள் இவ்விருவருக்கும் இனிநேரவிருக்கும் துன்பத்தைக் கருதித் துயருறுகிருர் என்பது புறஞ்சேரி இறுத்த காதையால் தெரியவருகிறது. மதுரை எல்லேயின் அருகில் அமைந்த புறஞ்சேரியில் அவர்கள் போய்த் தங்குகிருர்கள் என்று சொல்லத் தொடங்கியதும் இளங்கோவடிகளுக்குத் தம்மை அறியாமலே கலக்கம் உண்டாகின்றதுபோலும்! மதுரைக்குச் சென்ருல், அங்கு கோவலன் கொல்லப் படுவான் என்பதும், அவன் மறைவு காரணமாகக் கண்ணகி பெருங்கலக்க முறுவாள் என்பதும், உற்ருர் உறவினர் இல்லாத ஒரு நகரத்தில் கணவனே இழந்து தன்னந்தனியளாய் அழுது அரற்றிக் கண்ணகி ஏங்குவாள் என்பதும் அவர் அறிந்த செய்திகளே! இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டு எழுதும் இளங்கோவடிகள், தம் கலக்கத்தை வையை ஆற்றின் வருத்தமாக அமைத்துக் காட்டியுள்ளார்.

வையை ஆற்றிலே புதுப் புனல் வர, அதனிடைப் பூக்கள் பலவற்றை அடித்துக் கொண்டு வெள்ளம் வருகின்ற காட்சியைக் கவிஞர் புனைந்துரைக்கிருர். ஆற்றினேப் பெண்ணுக்கி அப்பெண் கண்ணகிக்கு நேர விருக்கும் கடுந்துயரைக் கருதி இப்பொழுதே முக்காடிட்டு அழுவது போன்று மலர்களால் மூடப்பட்டு வருவதாகக் கவிஞர் குறிப்பிடுகிருர்,

இதிலிருந்து இரக்க உணர்ச்சியைத் தெள்ளிதின் விளக்க வல்லவர் என்பதனே அறியலாம்.

## 10. வினை நிலம்

(திரு. மறைமலேயடிகள்)

### 1. தமிழ் மக்களின் உழவுத் தொழிலின் மேன்மையை இரண்டு சான்றுகள் காட்டி விளக்குக.

'ஓதுவார் எல்லாம் உழுவார் தலைக் கடையில்' என்ற முதுமொழியும், 'உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்' என்ற தெய்வப் புலவன் திருவாக்கும் இன்னே ரன்ன பிறவும் உழுதொழிற் சிறப்பை யுணர்த்தத் தக்க சான்றுகளாகும்.

**2. வயலைக் குறிக்கும் சொற்களாகத் தமிழ் மக்கள் வழங்கியுள்ளவற்றை எழுதுக.**

வயலைக் குறிக்கும் சொற்களாகத் தமிழ் மக்கள் வழங்கியுள்ளவை, பண்ணை, பணை, செய், செங்கழனி, பழனம், விளையுள், புலம், வரப்பு என்பன.

**3. முதன்முதலில் மக்கள் உழவினைத் தொடங்கியது எங்ஙனம்?**

பழங்கால மக்கள் மலைகளிலும், காடுகளிலுமுள்ள கனி கிழங்கு முதலியவற்றை உண்டு வாழ்ந்தனர். மக்கள் தொகை பெருகிய அளவிலே விலங்குகளையும், பறவைகளையும் உணவாகக் கொண்டனர். மேலும், மக்கள் தொகை பெருகி உணவுப் பற்றுக்குறை தோன்ற ஆடு, மாடுகளை வளர்த்து அவற்றினின்றும் கிடைக்கும் பாலையும், பாற்படு பொருள்களையும் உண்டனர். மேலும், மக்கள் தொகை பெருக இயற்கையாகவே வளர்ந்துள்ள அவரை, துவரை, மொச்சை, பயிறு, கடலை, எள் முதலியவற்றை உண்டனர். தொகை மேலும் பெருகப் பெருக இயற்கையாகக் கிடைக்கும் பொருள்கள் போதாமற் போகவே வெற்று நிலங்களைக் கொத்திப் பண்படுத்தி விதைத்துப் பயிர்களைத் தோற்றுவிக்க முனைந்தார்கள். விளைச்சல் அதிகம் கிடைப்பதை அனுபவத்தால் அறிந்து வெட்டவெளியாய்க் கிடந்த நிலங்களில் பயிரிட ஆரம்பித்தார்கள். இவ்வாறு தான் பயிரிடும் முறையைப் படிப்படியாக நம் முன்னோர்கள் அறிந்தார்கள் என்று மறைமலை யடிகள் குறிப்பிடுகிறார்.

**4. வயலைக் குறிக்கும் பல சொற்களுக்கும் உள்ள காரணங்களுள் ஒன்றை எழுதி விளக்குக.**

முதன் முதல் செயற்கைப் பயிர் செய்வதற்கு வெளி நிலங்களே பயன்பட்டமையால், அவை 'வயல், புலம்' என்றும் பெயர் பெறலாயின. 'வயல்' என்ற சொல்லுக்கு முதற்பொருள், வெளியென்பதாகும். 'புலம்' என்னும் சொல்லும் எவை தம்மாலும் மறைக்கப்படாமல் கண்ணுக்குப் புலப்பட்டுக் கிடக்கும் வெளியிடத்தையே உணர்த்தும்.

## 5. கழனி, பழனம் பெயர்க் காரணத்தை விளக்குக.

வல்லென்று கெட்டியாய் இருக்கும் நிலத்தில் மென் பதத்தவான நெல்லும், ஏனைய வித்துகளும் வேர் ஊன்ற மாட்டாமற் பட்டுப்போதல் கண்டு, வன்பாலான நிலத்தை மென்பாலாக்கும் முறையினைக் கண்டுகொண் டார்கள். நிலத்தைக் கிளறி அதற்குத் தண்ணீர் பாய்ச்சி னல், மண்ணும் தண்ணீரும் கலந்து, அது மென்பதப் படுதலை அறிந்தார்கள். இங்ஙனம் கிளறுதலாலும், தண்ணீர் பாய்ச்சுதலாலும் இறுகிய மண் கழன்று, நிலம் மென்பதம் அடைதலின் அங்ஙனம் கழன்ற வயல் நிலம், 'கழனி' எனப்பட்டது.

பின்னர் பண்படுத்தப்பட்ட அக்கழனியில் வித்திய நெல், ஒன்று பல்லாயிரமாய்ப் பயன் தந்ததாதலின், பின்னர் அது 'பழனம்', 'விளையுள்' எனப்பெயர் பெறலாயிற்று. பயன், பழம், பழன், விளைவு என்பன வெல்லாம் ஒரே பொருளைத் தரும் சொற்களாகும். பழன் என்பதே பழனம் என மருவிற்று.

## 6. தமிழ்நாட்டில் உழவுத்தொழில் சிறந்து விளங்குவதற்கு உரிய காரணங்கள் யாவை?

தமிழ்நாட்டின் கண் ஆறுகளும், குளங்களும், ஏரி களும், கால்வாய்களும் மிகுந்திருக்கின்றன. வேறு நாடுகளிலோ, அவை அங்ஙனம் மிகுந்திருக்கவில்லை. வடபெண்ணை, பாலாறு, தென்பண்ணை, காவிரி, வைகை, பொருநை, நெய்யாறு முதலியவை ஊடே ஊடே நீர் நிரம்பியோடுதலும், இவற்றில் நீர் ததும்பிப் பொலியுங் குளங்களும் தாமரை வாவிகளும், பெரிய பெரிய ஏரிகளும், அவற்றிலுள்ள நீரைக் கொண்டு சென்று கோடிக்கணக் கான வயல்களை ஊட்டுங் கால்வாய்களும், இத்தென் னாட்டின்கண் அடுத்தடுத்துக் காணப்படுதல் போல வேறெங்கும் காணப்படுதல் இல்லை. சோழ நாட்டிற்கு ஓர் உயிராய் நின்று நிலவுங்காவிரியாறு, நெடுந்தொலை விலுள்ள மேற்கரை மலைகளிலிருந்து, திரட்டிக் கொண்டும் வண்டல்கள், அந்நாட்டின் வயல்களிலும் படுகை களிலும் படிந்து, நிலத்தை மிகவும் செழுமையுறச் செய்கின்றன. பாண்டி நாட்டில் ஓடும் வைகை,

பொருநை முதலான ஆறுகளும் காவிரியாற்றிற்கு அடுத்த படியாக அந்நாட்டின் மருத நிலங்களை வளப் படுத்துந் தன்மையன வாகவே இருக்கின்றன.

இங்ஙனம் தமிழ்நாட்டின் இயற்கையமைப்பு பயிர்த் தொழிலுக்குப் பெரிதும் ஏற்ற பல நிலங்களும் பொருந்தி யிருத்தலால் உழவுத்தொழில் சிறந்து விளங்குகின்றது.

**7. தென்னாட்டிலுள்ள மருத நிலங்களின் பெருமைகளை எழுதுக.**

தென்னாட்டிலுள்ள மருத நிலங்களில் நெற்பயிர் மட்டுமேயன்றித் தென்னஞ் சோலைகளும், மாந்தோப்பு களும், கமுகுத் தோட்டம், வாழைத்தோட்டங்களும், எலுமிச்சை, நாரத்தை, பலா, கரும்பு முதலியன செழித் திருக்கும் தோட்டக்கால்களும், இஞ்சி, மஞ்சள், மிளகாய், சோம்பு, கருணை முதலியன வளர்ந்திருக்கும் கொல்லை களும் கண்ணையும் கருத்தையும் கவரும் வனப்பும் பயனும் மிக்கனவாய் ஆங்காங்குப் பரந்து காணப்படுகின்றன.

**8. உழவின் மேன்மையை விளக்கும் திருக் குறளின் கருத்தை எழுதுக,**

பற்பல தொழில்களைச் செய்து அலைந்தாலும் உலகி லுள்ள மக்கள் அனைவரும் ஏர் உழும் உழவனையே எதிர் நோக்குவதால், பல துன்பங்களை அடைந்தாலும் உழவுத் தொழிலே உயர்ந்த தொழில் என்பது அக்குறட் கருத்து.

## 11. கருங் கடற்கரை

(திரு. சு. ந. சொக்கலிங்கம்)

**1. கட்டுரையாசிரியர், 'ஊன் உண்ணும் வழக்க மில்லை,' என்று கூறியதைக் கேட்ட சோவி யத்து மக்கள் யாது கூறினர்கள் ?**

கட்டுரையாசிரியர், 'ஊன் உண்ணும் வழக்க மில்லை,'' என்று கூறியதைக் கேட்ட சோவியத்து மக்கள் என்னை வியப்புடன் நோக்கி, 'மாட்டுக் கறியையும்

பன்றிக் கறியையும் தின்ன மாட்டீர்களா? மீன் கூடவா சாப்பிட மாட்டீர்கள்? கோழி முட்டையைக் கூடவா தொடமாட்டீர்கள்? கோழிக் கறியைக் கூடவா தொட மாட்டீர்கள்?' என்று ஒரே மூச்சில் கேட்டுப் பெருமூச்சு விட்டு, வேறு எதைத்தான் உண்ணப் போகிறீர்கள்? சரி, நீங்கள் எப்படி உயிர் வாழ்கிறீர்கள்? உங்களுக்குத் திருமணம் ஆகிவிட்டதா? என்று பல கேள்விகள் கேட்ட பின்பு, 'எதற்காகச் சுவைமிக்க ஊனைக் கொள்ள மறுக்கிறீர்கள்? ஏதாவது மதக் கோட்பாடு காரணமா? அல்லது கடவுளுக்குப் பயமா?' என்று பரிவுடன் என்னைக் கேட்டனர். தெரிந்த அளவிற்கு உருஷ்ய மொழியில் நான் இந்த முறையில் வளர்ந்து விட்டேன்; வேறு ஒன்றும் காரணமில்லை; என்று சுருக்கமாகப் பதில் சொன்னதும், 'இந்தியாவில் எல்லாரும் இப்படியா, அல்லது சிலர்தான் இப்படியா?' என்று கேட்டார். 'பலர் ஊன் உணவு கொள்வர்; சிலர் மறக்கறி மட்டும் உண்பர் என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது பின்புறம் இருந்த ஒருவர், 'நீங்கள் சமணரா? என்று கேட்டார். 'அல்ல' என்றேன். சரி அப்படியானல் பிராமணரா? என்று தொடர்ந்தார்.

## 2. இரயில் பயணத்தில் பிரயாணிகளுக்கு என்னென்ன வசதிகள் செய்து தரப்படுகின்றன?

புகை வண்டியில் பயணம் செய்யும்போது அலுப்பு ஏற்படாமலிருக்க வானெலிப் பெட்டி வைக்கப்பட்டிருப்ப தால், அன்ருடச் செய்திகளைக் கேட்கலாம்.

பலதேசிய மொழிகளின் இசைப் பாட்டுகளைக் கேட்கலாம்.

சிலதேசிய மொழிகளில் பொருள் தெரியாவிட்டாலும் கேட்டால் மெய் சிலிர்க்கும். இசைக் கச்சேரியை அனுப விக்கத் தெரியாதவர்களும், பாடல்களில் மனத்தைப் பறி கொடுப்பார்கள்.

இங்கு மேசையும், நாற்காலியும் போடப்பட்டிருப்ப தால், கடிதமோ, கட்டுரையோ, நாட் குறிப்போ எழுதலாம்.

இவைகளே இரயில் பயணத்தில் பிரயாணிகளுக்குச் செய்து தரப்படுகின்ற வசதிகள் ஆவன.

**3. சோவியத்து மக்களின் குண நலன்களைப்பற்றி எழுதுக.**

சோவியத்து மக்களில் வேலை இல்லாதவர்களும் இல்லை. வேலை செய்யாதவர்களும் இல்லை. அங்கு மக்கள் ஓயாமல் உழைக்கவும், பாங்காக ஓய்வெடுத்துக் கொள்ளவும் அறிந்துள்ளார்கள். இவைகளே சோவியத்து மக்களின் குண நலன்களாவன.

**4. மாஸ்கோவிலிருந்து கருங்கடல் வரை உள்ள இடை வழியில் கட்டுரை ஆசிரியர் கண்ட காட்சிகள் யாவை?**

புகை வண்டியிற் செல்லும்போது இருமருங்கும் வானுற வளர்ந்த மரங்களும், குறுங்காடுகளும், அடர்ந்த காடுகளும், செறிந்த புதர்களும், சில மலைகளும் பெரிய ஏரிகளும், நீண்ட வாய்க்கால்களும், அகன்ற ஆறுகளும் கண்ணுக்கினிய காட்சி நல்கும்.

மலையின் மீது வளைந்து செல்லும் பாதைகள் வழியாகப் பேருந்து வண்டிகள் விரைந்து செல்லும். உதக மண்டலத்திலும், கோடைக்கானலிலும் இருக்கும் சாலைகள் போலவே அமைந்துள்ள இச்சாலையில் அவ் வண்டிகள் ஓடும்பொழுது எதிரில் உள்ள மலையையும், சாலைப் பக்கத்தில் அலைமோதும் கடலையும் மாறி மாறிப் பார்க்கும் போது, கோடைக்கானலும் குமரியும் மணந் திருப்பது போல இலங்கும்.

**5. 'அடங்கத் தெரிந்தவனுக்குத்தான் அடக்கத் தெரியும்' என்று விவேகானந்தர் கூறிய பொன்மொழி சோவியத்து நாட்டுக்கு எவ் வாறு பொருந்தும்?**

'அடங்கத் தெரிந்தவனுக்குத்தான் அடக்கத் தெரியும்' என்ற கருத்துப்பட விவேகானந்தர் மொழிந்துள்ளார். அதைப் போலவே உழைக்கத் தெரிந்தவனுக்குத் தான் ஓய்வெடுத்துக்கொள்ளவும் தெரியும் என்று எண்ணத் தோன்றுகிறது. வாரத்திற்கு ஒருநாள் விடுமுறை இன்றியமையாதது என்னும் கருத்துடன்

அங்கு ஞாயிற்றுக்கிழமை விடுமுறை நாளாக்கப்பட்டது. கடினமான வேலை பார்க்கிறவர்களுக்கு இரண்டு நாள் விடுமுறையும் உண்டு. வாரத்தில் ஆறு நாள்கள் ஒரே வகை வேலையில் ஆழ்ந்த மனம், ஒருநாள் அந்த வேலையிலிருந்து விடுபட்டு, விரும்பிய பொழுதுபோக்குகளில் ஈடுபடவேண்டும். அதேபோல ஆண்டில் பதினோரு திங்கள் கடுமையாய் உழைத்த ஒவ்வொருவருக்கும் அரசாங்கத்தாரால் மாத ஓய்வு அளிக்கப்படுகிறது. உடல் நலமுடையவர்களுக்கு ஒரு மாத விடுமுறையும் ஊதியமும் கிடைத்ததும் அவர்கள் முகங்களில் மகிழ்ச்சி தோன்றும். அவ்விடுமுறையில் சிலர் உல்கா நதியில் கப்பலிற்போய்ப் பல இடங்களைப் பார்ப்பர். சிலர் காக்கஸஸ் மலைக்குச் செல்வர். பல்லாயிரவர் கருங்கடற் கரையிலுள்ள நலம் பேணும் விடுதிகளுக்குப் போய்த் தங்குவர். இவற்றைச் சிந்திப்பின் விவேகானந்தர் பொன்மொழி சோவியத்து நாட்டுக்குப் பொருந்துவது புலனாகும்.

## 6. என்புருக்கி நோய் கொண்டவர் சோவியத்து யூனியனில் எவ்வாறு பேணப்படுகின்றனர்?

நோயைப் பெரும் பகையாக மதித்து நாட்டிலிருந்து அதை ஓட்ட மருத்துவர் பலர் முனைந்துள்ளனர்; 'என்புருக்கி' என்னும் பொல்லாப் பிணியை அகற்றுவதற்குப் பெரும் பாடுபடுகின்றனர். இந்நோயை ஒழிக்க கங்கணம் கட்ட வேண்டுமெனப் பெருந்தகை லெனின் கூறிய வாசகத்தை நலம் பேணும் விடுதிகள் எல்லாவற்றிலும் எழுதியுள்ளனர். என்புருக்கி நோயாளிகளுக்கு இரு மாத விடுமுறையும், இரு மாதச் சம்பளமும் கொடுத்து, அவர்களை நலம் பேணும் விடுதிகளுக்கு அனுப்புகின்றனர். இவ்வாறு என்புருக்கி நோய் கொண்டவர் பேணப்படுகின்றனர்.

## 7. நலம் பேணும் விடுதியில் என்னென்ன வசதிகள் செய்யப்பட்டுள்ளன?

நலம் பேணும் விடுதியில் யாவும் திட்டமிட்டபடி நடக்கின்றன. காலையில் எழுந்ததும் இங்குள்ளவர் உடற்பயிற்சி செய்வர். நல்ல உடலுடையவர் கடலாடுவர். நோயாளிகளின் உடல் நிலைக்கு ஏற்பக் கடல் நீரைச் சூடாக்கிக் குளிக்க வழி செய்துள்ளனர். காலை உணவு

கொள்ளும்பொழுது உணவுத் துறை மருத்துவர் அனைவர் அருகிலும் போய் நன்ருகச் சாப்பிடும்படி கட்டாயப் படுத்துவர். உண்ட பிறகு கடலோரத்தில் படுத்துக் கதிரொளியில் மூழ்குவர்.

உடல் உரத்தைச் செம்மைப் படுத்துவதற்கும் எலும்பு நரம்பும் ஏக்கமுழத்தமும் தடைபடாக் குருதியோட்டமும் பெறுவதற்கும் உடற்பயிற்சிக் களரி அமைந்துள்ளது. இரவுப் பொழுதில் கடலுக்கு மிக அண்மையில் படுத்து உறங்குவதற்கும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. உடல் நல விதிகள் உடலோம்பல் முறைகள் ஆகியவை குறித்துப் பேசும் படக் காட்சிகள் காட்டப்படும். அளவுக்கு மீறி ஊதிப்போய், பானைபோலப் பருத்த தொந்தியுடன் ஆமைபோல அசைந்து நடக்கவும் இயலாமல் தத்தளிப்பவரின் கெட்ட பழக்க வழக்கங்களை எடுத்துக் காட்டிச் சீரான உடற்கட்டு அமைத்துக் கொள்ளுதற்குரிய நன்னெறியை விளக்கும் படக்காட்சிகளும் அங்குக் காட்டப்படும்.

**8. உடல் நலம் பேணும் விடுதியில் தங்குவோர் தாம் அங்கு தங்கும் நாள்களை எவ்வாறு கழிக்கின்றனர்?**

நலம் பேணும் விடுதிகளில் தங்கியிருக்கும்போது சிலர் சுற்றுலாச் செல்வதும் உண்டு. சிலர் பொருட்காட்சிசாலைகளையும், பூஞ்சோலைகளையும் கண்டு களிப்பெய்துவர்; கடலில் ஓடம் செலுத்துவர்; பெரும் படகிலும், சிறு கப்பல்களிலும் போய் வருவர்; மலையில் ஏறி இன்புறுவதும் உண்டு.

## 12. ஜான் வெஸ்லி

(தழுவல்)

**1. வெஸ்லியின் இளமைப் பருவம் எவ்வாறு கழிந்தது?**

வெஸ்லி தாய் தந்தையரின் அறிவுரைகளை ஏற்று அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகி வந்தார். ஆறு ஆண்டுகள் பள்ளியில் கற்ருர். நல்ல நூல்களைப்

பயின்று அதன் வழி தன் வாழ்க்கை முறைகளை ஒழுங்காக அமைத்துக்கொண்டார். பிறகு ஆக்ஸ்போர்டிலுள்ள கிறிஸ்து சர்ச்சுக் கல்லூரியில் பயின்றார். பல மாணவர்களைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு அவர்களைத் தம் ஆசையை அடக்கியாளும் முயற்சியில் ஈடுபடுத்தினார். பலவகையான தொண்டுகளை அவர்கள் மேற்கொண்டனர். இறைவழிபாட்டில் மிகுதியான நேரத்தைச் செலவிட்டனர். இவ்வாறாக வெஸ்லியின் இளமைப் பருவம் கல்வியிலும் இறைவழிபாட்டிலும் சமூகத் தொண்டிலும் கழிந்தது.

## 2. வெஸ்லி காலத்து இங்கிலாந்தின் நிலை எத்தகையது?

வெஸ்லி காலத்து இங்கிலாந்து குடிப்பழக்கத்திலும் ஒழுக்கக்கேட்டிலும் ஆழ்ந்து கிடந்தது. பிறரைப் பழித்தல், வஞ்சினம் கூறுதல், சண்டையிடுதல் முதலியன இயல்பான நிகழ்ச்சிகளாக விருந்தன. காளைகளை மோதவிட்டு வேடிக்கை பார்ப்பது பெரும் பொழுதுபோக்காக விருந்தது.

## 3. வெஸ்லி மக்களைத் திருத்த மேற்கொண்ட முறை யாது?

ஜான் வெஸ்லி மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்குரிய நெறிமுறைகளைப் பற்றி அவர்கள் உள்ளம் ஏற்கும் வண்ணம் சொற்பொழிவுகள் செய்தார். அவரது கருத்துகள் மக்களால் ஏற்கப்பட்டன. மனம் மாறி குடிப் பழக்கத்திலிருந்தும் ஒழுக்கக் கேட்டிலிருந்தும் மக்கள் விடுபட்டார்கள். திருந்திய மக்களிற் பலர் வெஸ்லியோடு சேர்ந்து தொண்டாற்ற முன்வந்தனர். அவர்கள் ‘நேர்மை வழி நடப்பவர்கள்’ என்றழைக்கப் பட்டனர்.

## 4. வெஸ்லியின் நற்றொண்டால் விளைந்த பயன்கள் யாவை?

வெஸ்லியின் நற்றொண்டு இங்கிலாந்தை இரத்தப் புரட்சியிலிருந்து காத்தது. ஏழைகட்கு இலவச மருத்துவ மனைகள் ஏற்பட வழிகாட்டினார். ஏழைகட்கு வேலை

வாய்ப்புகள் கிடைத்தன. மக்கள் மனம் திருந்தி நேர் வழி நடக்க முற்பட்டனர். தீய பழக்கங்கள் வெகுவாகக் குறைந்தன. இவ்வாருன பயன்கள் வெஸ்லியின் நற்ருெண்டால் விளைந்தன.

### 5. மக்களின் நல்வாழ்விற்கு அடிப்படையென வெஸ்லி நம்பிய பண்பாடுகள் யாவை?

எளிய உணவும், தூய காற்றும், மிகுந்த உடற் பயிற்சியும் நல்லது என்ற மனமுமே நல்வாழ்வுக்கு அடிப் படையான பண்புகள் என ஜான் வெஸ்லி நம்பிஞர்.

### 6. வெஸ்லி மேற்கொண்ட சிக்கன வாழ்வை எதனுல் அறியலாம்?

வெஸ்லி தான் எழுதிய நூல்களுக்காகக் கிடைத்த 40,000 பவுன்களையும் மற்றவர் நன்மைக்காக வழங்கி விட்டு, தனது சொந்தச் செலவுகளை ஆண்டுக்கு 30 பவுன் களுக்குள்ளேயே அடக்கிக் கொண்டார். தமக்கு எளிய மரணச் சடங்கினையே விரும்பினுர். தனது பிணத்தை ஆடம்பரமாகப் பிணவண்டியில் எடுத்துச் செல்ல வேண்டாமென்று கூறி, சுமக்க அறுவரை நியமித்து அதற்கான கூலியையும் கொடுத்துவிட ஏற்பாடுசெய்தார். இவற்றிலிருந்து வெஸ்லி மேற்கொண்ட சிக்கன வாழ்வை அறியலாம்.

### 7. வெஸ்லியின் குண நலன்களை விளக்கி எழுதுக.

வெஸ்லி பெற்ருேருக்கு அடங்கி நடந்து அவர்களது அறிவுரைகளைக் கேட்டு அதன் வழி நடந்தவர். தொடக்கக் கல்வி நிலையிலேயே நேர்மையான நூல்களைப் படித்து அதற்கேற்பத் தனது வாழ்க்கை நெறிகளை அமைத்துக் கொண்டவர். கல்வியில் அதிக நாட்ட முடையவர். இறைவழிபாட்டில் நம்பிக்கையும் ஈடுபாடும் கொண்டவர். மக்களை நல்வழிப்படுத்த முனைந்தவர். சிறந்த சொற்பொழிவாளர். சிறந்த எழுத்தாளர். சிக்கன வாழ்வை மேற்கொண்டவர். ஏழைகட்கு இரங்கும் இதயம் கொண்டவர். ஏழைகட்கு வாழ்வளிக்கப் பல தொழில் நிலையங்களைத் தோற்றுவித்தவர். தனது செலவைச் சுருக்கிக்கொண்டு தனது சொத்துகளை

மற்றவர் நலனிற்காகவே வாரி வழங்கியவர். விடியற் காலேயே எழுந்து சுறுசுறுப்பாகப் பணிகளை மேற் கொள்ளும் பண்பினர். ஆடம்பரங்களை வெறுத்தவர். இவ்வாறாக, ஜான் வெஸ்லி பல குணநலன்களைப் பெற்றிருந்தார்.

## 13. சரித்திரம் கற்பிக்கும் பாடம்

(திரு. ஜவஹர்லால் நேரு)

**1. சரித்திரத்தைக் கூர்ந்து கவனித்தால் விளங்கும் உண்மை யாது?**

சரித்திரத்தைக் கூர்ந்து கவனித்தால், இவ்வுலகம் புல், பூண்டு, புழு, மரம், பறவை, விலங்கு, பாம்பு, கல், மனிதன் என்று வளர்ந்து மாறி வருகிற பரிணாம முறையை அறியலாம். அனைத்து உயிரினங்கட்கும் பின்னால் தோன்றிய மனிதன் தனது பகுத்தறிவின் வன்மையால் முன்னர்த் தோன்றிய உயிரினங்களை வென்று மேம்பட்டு நிற்கிறான் என்ற உண்மையையும் காட்டுமிராண்டி வாழ்க்கையிலிருந்து படிப்படியாக முன்னேறி நாகரிக வாழ்க்கைக்கு உயர்ந்திருக்கிறான் என்ற செய்தியையும் உணர முடியும்.

**2. உலகம் முன்னேக்கிச் செல்கிறதா அல்லது பின்னேக்கிச் செல்கிறதா என்னும் ஐயம் ஏன் ஏற்படுகிறது?**

சேர்ந்து வாழவேண்டுமென்ற எண்ணமின்றி ஒரு நாட்டார் இன்னொரு நாட்டாரை எதிர்த்துத் துன்புறுத்து வதையும், மனிதனை மனிதன் சுரண்டிப் பிழைப்பதையும் நாம் எங்கும் காண்கிறோம். முற்காலத்தில் மனிதன் கூடிவாழவும் பொது நலத்திற்காக உழைக்கவும் படிப் படியாகக் கற்றான் என்று சரித்திரம் கூறுகிறது. படிப் படியாகக் கற்று முன்னேறிய மனிதன் இன்று அதனின் றும் மாறி சேர்ந்து வாழ்கின்ற எண்ணத்தைக் குலைத்து வருகிறான்.

சரித்திரத்தின் சில பகுதிகளைப் படிக்கும்போது அக் காலப் பகுதிகளிற் சில நாம் வாழும் இக்காலத்தைவிடக் கலைப் பண்பும் நாகரிக மேம்பாடும் பெற்று விளங்கிய மையைக் காண்கிறோம்.

இவற்றை நோக்க 'உலகம் முன்னேக்கிச் செல்கிறதா அல்லது பின்னேக்கிச் செல்கிறதா' என்னும் ஐயம் தனக்கு ஏற்படுவதாக ஜவஹர்லால் நேரு குறிப்பிடுகிறார்.

**3. கறையானும் எறும்பும் மனிதனைவிட எவ் வகையில் உயர்ந்தவை?**

கறையான் எறும்பு ஆகியவை பொது நலத்திற் காகத் தியாகம் செய்யவும் கூடி வாழவும் மனிதனைவிட நன்ருக அறிந்துள்ளன. கறையான் தன் இனத்திற்காகத் தன்னையே கொடுக்கிறது. இவற்றை நோக்க, கறை யானும் எறும்பும் மனிதனைவிட உயர்ந்தவையாக ஜவஹர்லால் நேரு குறிப்பிடுகிறார்.

**4. ஜவஹர்லால் நேரு குறிப்பிடும் வடமொழிச் சுலோகத்தின் உட்கருத்து யாது?**

ஒரு குடும்பத்துக்காகத் தனி மனிதனையும், சமூகத்திற் காகத் தன் குடும்பத்தையும் நாட்டுக்காகச் சமூகத்தையும் ஆன்ம நன்மைக்காக உலக முழுவதையும் தியாகம் செய்ய வேண்டும்' என்பது அச்சுலோகமாகும். நாம் அனைவரும் ஒன்றுபட்டு வாழவேண்டுமென்பதும் பிறர் நலத்துக்காக ஒருவர் தம்மைத் தியாகம் செய்ய வேண்டும் என்பதும் அதன் உட்கருத்தாகும்.

**5. 'இந்தியாவின் விடுதலையைவிடப் பெரியது' என்று நேரு எதனைக் குறிப்பிடுகிறார்?**

உலகம் முழுமையிலும் தாழ்ந்த நிலையில் துயருற்றுக் கிடக்கும் ஏழை எளிய மக்களின் விடுதலைக்காகப் பாடு படுவது இந்தியாவின் விடுதலையைவிடப் பெரியதாகும் என்று ஜவஹர்லால் நேரு குறிப்பிடுகிறார்.

## 14. நல்ல மரமும், நச்சு மரமும்

(திரு. டாக்டர் ரா. பி. சேதுபிள்ளை)

### 1. அரசிளங்குமரனும், அவன் தோழனும் எங்ஙனம் துயருற்றனர்?

அரசிளங்குமரனும், அவன் தோழனும் விரும்பியவாறு வேட்டையாடப் புலியும், யானையும் அகப்படாமையால் பல இடங்களிலும் அலைந்து திரிந்து அல்லலுற்றனர். பசியால் மெலிந்து, வெயிலால் உலர்ந்து தளர்ந்து சோர்ந்தனர். அரசிளங்குமரன் தலைநோயுற்றான். இருவரும் உடல் சோர்ந்து, நாவரண்டு, நடப்பதற்கும் வலிமையற்றவராயினர்.

### 2. தோழர்கள் கண்ட பொய்கை எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது?

தோழர்கள் கண்ட பொய்கை சிறிய அலைகளோடு கூடிய நல்ல நீரைப் பெற்றிருந்தது. ஆங்கிருந்த செந்தாமரை மலர்களில் அன்னங்கள் அழகுறத் துயின்றன. அழகிய மலர்கள் அவர்களை வரவேற்பன போல் அசைந்தன. தாகத்தால் வருந்திய இருவருக்கும் தண்ணீரை எடுத்து வழங்குவது போல் அடுக்கடுக்காய் அலைகள் கரையருகே வந்தன.

### 3. பொய்கைக் கரையில் நண்பர் இருவரும் எவ்வாறு இன்புற்றனர்?

பொய்கையின் செம்மையையும், தண்மையையும் கண்ட நண்பர்கள் இருவரும் தாய்முகம் கண்ட சேய் போல மனங்களித்தனர். தாகம் தணிந்தபின் மனமும் மெய்யும் குளிர அக்குளத்தின் ஈரக்கரையில் அமர்ந்து இளங்காற்றை நுகர்ந்து இன்புற்றனர்.

### 4. பொய்கைக் கரையின் மரம் எவ்வாறு சிறந்து விளங்கியது?

பொய்கைக் கரையில் அமைந்திருந்த மரம் பொன்னிறக் காய்களைத் தாங்கிக் குளிர் நிழல் விரித்து நின்றது.

கதிரவன் வெப்பத்தைத் தடுப்பதற்காகப் பசிய இலை களால் உயரமாக அமைக்கப்பட்ட பந்தல் போல விளங்கியது.

## 5. மர நிழலில் நண்பர் இருவரும் எங்ஙனம் இன்புற்றனர்?

கதிரவன் வெப்பத்தைத் தடுப்பதற்காகப் பசிய இலை களால் உயரமாக அமைக்கப்பட்ட பந்தல் போல விளங் கிய மர நிழலில் இருவரும் அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்த னர். உறக்கம் கலைந்து எழுந்த தோழன் பசியின் கொடுமையால் மரத்தைப் பார்த்தான். பழங்களைப் பறித் துப் பசியைப் போக்கிக் கொண்டபின் நண்பனுக்காகக் கனிகளைக் கொய்து கொண்டுவந்து நண்பனை எழுப்பி ஞன். கனிகளது நிறத்தைக் கண்டும், மணத்தை நுகர்ந் தும் சுவையைத் துய்த்தும் இன்புற்றிருந்தனர்.

## 6. அரசிளங்குமரனின் தலைநோய் எப்படித் தீர்ந்தது?

அரசிளங்குமரன் தலைநோயால் வருந்திக்கொண்டு இருந்தபோது முதியவன் ஒருவன் அவ்வழி வந்தான். அவனை நோக்கி அரசிளங்குமரன் தலைநோய்க்கு மருந்து கேட்டான். முதியவன் அவர்கள் அருகில் நின்ற மரத்தி னது பட்டையின் சாற்றைத் தலையில் பிழிந்து விடுமாறு கூறினன். தோழன் அம்மரப்பட்டையினது சாற்றை அரசிளங்குமரனது தலையிற் பிழிந்தான். உடனே அவனது தலைக்குத்து அறவே ஒழிந்தது.

## 7. தலைநோய் நீங்கிய அரசிளங்குமரனை நோக்கித் தோழன் கூறியது யாது? (20 வரிகள்)

தோழன் தலைநோய் நீங்கிய அரசிளங்குமரனை நோக்கி, தாம் பசியாலும் வெயிலாலும் வருந்திவந்த நிலை யில் அங்குள்ள தடாகம் வரவேற்று நீர் வழங்கியது என்றும், அங்கிருந்த மரமானது தங்குவதற்குக் குளிர் நிழல் தந்து பசியாறப் பழங்களை நல்கியது என்றும், அதன் வழி நல்லார் கைப்பட்ட செல்வத்தின் தன்மை விளங்குமென்றும் கூறினன். மேலும், வறுமையால்

வாடியவர்களை இன்முகத்தோடு வரவேற்று அவரது குறையைத் தீர்ப்பதே அறிவுடையார் செயலென்றும், ஆற்று வழியாகவும், ஊற்று வழியாகவும் நன்னீரைத் தன்னகத்தே நிரப்பிக்கொள்ளும் பொய்கை போல அறிவுடையவர்கள் நல்வழியில் ஈட்டிய பெரும் பொருள் நிறைந்த பண்ணைகளாய் விளங்குவார்கள் என்றும் நீர் நிறைந்த பொய்கை எப்பொழுதும் குளிர்ச்சியாக இருப்பதுபோல அறிவுடைய செல்வரும் ஈர நெஞ்சின ராய் இலங்குவர் என்றும், தாகத்தால் வருந்தியோர்க்குத் தடையின்றி நீர் வழங்கும் தடாகம் போல கல்வியிலும், செல்வத்திலும் மேம்பட்டோர் வறிஞர்க்கு வரையாது பொருள் வழங்குவர் என்றும், தமக்காக வாழும் தன்மை யில்லாத பெரியோர்பால் அமைந்த செல்வம் ஊருணி நீர் போல் ஊரார்க்கே முழுவதும் பயன்படும் என்றும் கூறி ஞன். மேலும், பழுதற்ற பழங்களைத் தாங்கி நிற்கும் இப் பழ மரம், பழங்களால் பசியகற்றி, நிழலால் களைப்பு நீக்கி, பட்டையால் பிணியகற்றிப் பலவகைகளில் பயன் படுவதுபோல அறிஞரிடம் அமைந்த செல்வம் வறிய வர்க்குப் பலவகையிலும் பயன்படும் என்றும் கூறித் தண்மை வாய்ந்த தடாகம் போன்றும், பழங்கள் நிறைந்த பயன் மரம் போன்றும் வாழ்வதே பண்புடைமை யாகும் என்றும் கூறினன்.

## 8. வழியில் குறுக்கிட்ட சிற்றூரில் நண்பர் இருவரும் வியந்து நோக்கியது எதனை? ஏன்?

நண்பர் இருவரும் வழியில் குறுக்கிட்ட சிற்றூரில் தாம் முன்னர் பார்த்தறியாத காட்டு மரம் போல ஓங்கி வளர்ந்திருந்த ஒரு மரத்தைக் கண்டனர். அதன் கிளை களில் கூரிய முட்கள் நிறைந்துள்ளன. பட்ட மரம் போலத் தோற்றமளித்த அதன் கிளைகளில் செவ்வை யாகப் பழுத்த பழங்கள் கொத்துக் கொத்தாய் கண்களைக் கவரும் வண்ணம் காணப்பட்டன. தாம் அதுவரை

பார்த்தறியாத மரமாதலானும் பட்ட மரம்போல் தோன்றும் அம்மரத்தில் கண்ணைக் கவரும் வண்ணம் கனிகள் தோன்றியமையாலும் வியந்தனர்.

### 9. இளைஞன் இரு நண்பர்களையும் நோக்கிக் கூறியது யாது ?

இளைஞன் இரு நண்பர்களையும் பார்த்து யாரும் கண்ணெடுத்தும் பார்க்க விரும்பாத அந்த நச்சு மரத்தினை வியந்து பார்த்துக்கொண்டிருப்பதால் அவர்கள் இருவரும் ஊருக்குப் புதியவர்களாக விருக்கவேணடுமென்று தான் அறிந்ததாகவும், அம்மரத்தில் எந்நாளிலும் இலைதழைகள் இல்லாமையால் விலங்குகளும் அதனடியில் நில்லாது விலகிப் போகுமென்றும், அம்மரத்தின் கனிகள் நச்சுக் கனிகளாய் இருத்தலின் உண்பவர்களைக் கொன்று விடும் என்றும், விறகாக வெட்டி எரிப்பதற்கும் அதன்கண் அமைந்த முட்கள் இடையூறாக அமைந்துள்ளது என்றும், அம்மரம் கடுங்காற்றில் முறிந்து வீழ்ந்து அழியவேண்டு மென்று ஊரார் இறைவனை வேண்டி வந்தார்கள் என்றும், அம்மரம் விழும் நாளே அவ்வூர்க்கு நன்னாள் என்றும் கூறினான்.

### 10. நச்சு மரத்தின் வரலாறு கேட்ட அரசிளங் குமரன் தன்னுள் எண்ணியது யாது ?

அரசிளங்குமரன் தான் முன்னர் தங்கியிருந்த நன் மரத்தின் தன்மைகளையும் நச்சு மரத்தின் தன்மையையும் ஒப்பிட்டுப் பார்த்தான். நச்சு மரத்தில் அமைந்த நன்னிறக் கனிகள் பேதையார் கைப்பட்ட செல்வம் போலப் பிறர்க்கு இடர் விளைவிப்பனவாகும் என்று எண்ணினான்.

### 11. செல்வம் யாரிடத்தே அமையவேண்டும் ? ஏன் ?

செல்வம் அறிவுடையவனிடத்தே அமைய வேண் டும். அச்செல்வம் உலக மக்களுக்கு நன்மை பயக்கும். அறிவில்லாதவன் செல்வம் பெற்றால் பயன்பட வாழும் பண்பறியாப் பேதையனாய் இம்மையிற் பழியும் மறுமை யில் துன்பமும் அடைவான்.

## 15. அவன் யார்?

(டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்)

### 1. மிகப் பழைய தமிழ் நூல்கள் யாவை?

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்பன மிகப் பழைய தமிழ் நூல்களாகும்.

### 2. பழைய தமிழ் நூல்களால் அறியப்படும் செய்திகள் யாவை ?

பழைய தமிழ் நூல்களால் பண்டைக்காலத்தில் இருந்த புலவர் வரலாறுகளையும், அவர்களை ஆதரித்துப் போற்றிய செல்வர்கள் வரலாறுகளையும், அக்காலத் தமிழ்நாட்டினரது நாகரிக நிலை, ஒழுக்கம் முதலியவற்றையும், பேரரசர், சிற்றரசர்களுடைய வரலாறுகளையும், வீரப் பெருமக்களது அருஞ்செயல்களையும் நாம் அறிந்து கொள்ளக் கூடும்.

### 3. பழந்தமிழர் இருகண்களெனக் கருதிய பண்புகள் யாவை? அவற்றை வள்ளுவர் எவ்வாறு கூறியுள்ளார்?

வீரம், ஈகை ஆகிய இரண்டையும் பழந்தமிழர் இரு கண்களெனக் கருதினர்.

திருவள்ளுவர், வீரர்கள் விழுப்புண் பெறுத நாள்களையெல்லாம் தான் வாழாத நாளாகவே கருதுவர் என்று கூறுவதன் வாயிலாக, வீரமின்மையால் வாழ்வு பயனற்றொழியும் என்ற கருத்தையும் ஈகையைச் செய்யமுடியாத போது துன்பம் தரும் மரணமும் இன்பமாகத் தோன்றும் என்றும் கூறுவதன் வாயிலாக ஈயாமல் இருப்பதைக் காட்டிலும் இறந்து படுதல் இனியது என்ற கருத்தையும் பெற வைத்துள்ளார்.

### 4. புலவர் சுற்றம் பட்டினி கிடந்த நிலை எவ்வாறு கூறப்பட்டுள்ளது ?

புலவனது ஓய்ந்த நடையும் முகத்திலுள்ள வாட்டமும் பல நாள்களாக அவன் பட்டினி கிடந்த நிலையைப் புலப்படுத்தின. உடன் வந்த சுற்றத்தாரது நிலையும்

அவ்வாறே இருந்தது. அவரது இடையிலிருந்த ஆடை அழுக்கடைந்தும் கிழிந்தும் காணப்பட்டது. குளிர் காலத்தில் மழைத் துளியால் நனைந்த பருந்தினது கரிய சிறகைப் போல் அது தோன்றியது. அவருக்குத் தான் எங்கே, யாரைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவுகூட இன்றிக் கால் போன வழியே போய்க்கொண்டிருந்தார். அவரைத் தொடர்ந்து பட்டினிச் சுற்றத்தாரும் சென்றனர்.

## 5. நள்ளி புகழை விரும்பாதவன் என்பதை எதனால் அறியலாம்?

நள்ளி புலவரையும் அவரது கூட்டத்தாரையும் உணவளித்து உபசரித்து அவர்கட்குத் தன்னிடமிருந்த முத்து வடங்களையும் பொற்கடகத்தையும் கழற்றிக் கொடுத்தான். புலவர்தம் பெயரைக் கேட்டு அறிந்தானே தவிர தன்னுடைய பெயரை அவர் எவ்வளவு வற்புறுத்தியும் கூறவில்லை. இதிலிருந்து நள்ளி புகழை விரும்பாதவன் என்பதை உணரலாம்.

## 6. நள்ளி புலவனுக்குச் செய்த உதவிகளை விளக்கி எழுதுக.

புலவரையும் அவரது சுற்றத்தாரையும் பார்த்தவுடனேயே அவர்களது நிலையைக் குறிப்பால் உணர்ந்து அவர்களிடம் எத்தகைய அசட்டுக் கேள்விகளையும் கேட்டுக் கொண்டிராமல் உடனே அவர்களது பசிபோக்க முனைந்தான். தன்னுடன் வந்தவர்கள் எல்லாம் வேற்றிடம் சென்றிருந்த நிலையிலும் தானாகவே சுள்ளிகளைப் பொறுக்கித் தீமூட்டி தான் வேட்டையாடிக் கொணர்ந்த மான் தசைகளை நெருப்பிலிட்டுப் பக்குவப்படுத்தி அவர்களை உண்பித்தான். தனது கழுத்திலிருந்த முத்து மாலைகளையும் கையிலிருந்த பொற்கடகத்தையும் கழற்றிக் கொடுத்தான். இறுதிவரை தான் யார் என்று கூறாமலேயே அவர்களிடமிருந்து விடைபெற்றான்.

## 16. நிலவில் மனிதன்

(திரு. இரா. முத்துக்குமாரசாமி)

### 1. திங்களைப் பற்றி இலக்கியங்களில் கூறப் படுவன யாவை?

இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் 'திங்களைப் போற்றுதும்' என்று குறிக்கிறார். பிள்ளைத் தமிழில் பாட்டுடைத் தலைவனோடு ஆடவருமாறு அம்புலி அழைக்கப்படுகிறது. கவிஞர்களின் கற்பனையில் மூழ்கிப் பல்வேறு புகழுரைகளைப் பெற்றது.

### 2. நிலவிற்குச் செல்லவேண்டுமென்ற எண்ணம் நெடுங்காலமாகவே கவிஞர்கட்கு உண்டு என்பதை எங்ஙனம் அறியலாம்?

கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிரியா நாட்டுக் கவிஞன் புயலிற் சிக்கிய படகு நிலவிற்கே தூக்கிச் செல்லப்பட்டதாக எழுதினான். பெரிசியக் கவிஞனை பிர்தூசி கழுகுகளால் மனிதன் நிலவை அடைந்தான் எனப் பாடினான். இத்தாலியக் கவிஞனை அரியசுட்டோ குதிரை வண்டியில் மனிதன் நிலவுக்குச் சென்றதாகப் பாடினான்.

### 3. அம்புலியின் அமைப்பை விளக்கி எழுது.

அம்புலி பூமியைச் சுற்றி வரும் ஒரு கோளம்; பூமியின் குறுக்களவில் காற்பங்கு உருண்டையான அமைப் புடையது. நிலவின் ஈர்ப்பாற்றல் பூமியின் ஈர்ப்பு ஆற்றலில் ஆறில் ஒரு பங்கு ஆகும். மேற் பரப்பில் காற்றும் தண்ணீரும் இல்லை. பூமியிலிருந்து ஏறத்தாழ நான்கு இலட்சம் கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நிலவுக்குத் தானே ஒளிரும் ஆற்றல் இல்லை.

### 4. அப்போலோ—11 கலன் எவ்வாறு அமைக்கப் பட்டது?

அப்போலோக் கலன், 'வாழும் பகுதி', 'எரிபொருட் பகுதி', நிலாக்கலனை 'கழுகுப் பகுதி' என்னும் மூன்றும் மூன்று பகுதிகளாலானது. அதைச் செலுத்தும்

சனி—5 என்னும் ஏவுகணையும் அப்போலே – 11–ம் ஒன்றன் மேல் ஒன்று பொருத்தப்பட்ட நிலையில் 108·9 மீட்டர் உயரம் இருந்தது.

### 5. அப்போலோ—11இன் பயணம் குறித்துக் கூறப்படும் செய்திகள் யாவை?

1969ஆம் ஆண்டு, சூலைத் திங்கள், 16–ம் நாள் இரவு 7–02-க்கு கென்னடி முனையிலிருந்து பயணம் தொடங்கியது. நீல் ஆம்ஸ்டிராங், எட்வின் ஆல்டிரின், மைக்கேல் காலின்ஸ் என்ற மூவரும் அதில் சென்றனர். இருநூறு கிலோ மீட்டர் உயரத்தில் சென்று பூமியை ஒரு முறை வலம் வந்து இரண்டாவது சுற்றுப்பாதியில் நிலவை நோக்கிப் பாய்ந்தது. தரைக் கட்டுப்பாடு நிலையம் கலனை நெறிப் படுத்தியது. அந்நிலையத்திற்கும் கலனிற்கும் இடையே ஒலி, ஒளித் தொடர்பிருந்ததால் செய்திகளையும் படங்களையும் அவ்வப்போது அனுப்பமுடிந்தது. சூலை 19ஆம் நாள் அம்புலியை வலம் வரத் தொடங்கினர்கள். பன்னிரண்டாம் முறையாக வலம் வந்தபோது நிலவில் இறங்கவேண்டிய ‘கழுகுக் கலன்’ தாய்க் கலனிலிருந்து பிரிந்து ஆம்ஸ்டிராங்கு, ஆல்டிரின் ஆகிய இருவருடன் சென்று நிலவில் இறங்கியது. சூலை 20ஆம் நாள் காலை 8–27-க்கு நிலவில் ஆம்ஸ்டிராங் காலடி வைத்தார்.

### 6. விண்வெளி வீரர்கள் அம்புலியில் செய்த செயல்கள் யாவை?

அம்புலியில் கால் வைத்த வீரர்கள் அங்கு தாம் கண்ட காட்சிகளை வருணித்தார்கள். தங்களது செயல்களை நிலவுலகில் இருப்பவர்கள் பார்த்து மகிழத் தொலைக் காட்சிக் கருவியை அமைத்தார்கள். ஆராய்ச்சிக்காக நிலா மணலையும், பாறைகளையும் அவர்கள் எடுத்துக் கொண்டார்கள். நிலவு பூமியிலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பதைக் காட்டக் கூடிய ‘லாசர்’ ஒளி பிரதிபலிப்புக் கருவியையும் நில அதிர்வைக் காட்டக்கூடிய பொறியையும் நிலாப் பரப்பில் பதித்தார்கள். அமெரிக்கக் கொடியை நட்டார்கள். ஐக்கிய நாட்டு அவையைச் சேர்ந்த 78 நாடுகளின் பெருந் தலைவர்கள் அனுப்பிய வாழ்த்துச் செய்திகள் பொறிக்கப் பட்ட தகடு ஒன்றையும், அந்நாடுகளின் கொடிகளையும்

தரையில் வைத்தார்கள். விண்வெளி வீரர்களின் கையெழுத்துகளும், அமெரிக்க குடியரசுத் தலைவர் நிக்சனின் கையெழுத்தும் பொறிக்கப்பட்ட தகடும் அங்கு வைக்கப்பட்டது.

### 7. திங்களைப்பற்றி இதுவரை வெளிப்பட்ட செய்திகள் யாவை?

பூமியைப் போலவே அம்புலியும் இயக்கமுடையது. நிலவில் வைக்கப்பட்டுள்ள அதிர்ச்சிப் பதிவுக் கருவி அவ்வப்போது அனுப்பிவரும் செய்திகளின் வழி அங்கு ஏற்படும் அதிர்ச்சிகள் இங்குத் தெரிகின்றன. நிலவில் இயக்கம் நடைபெறுவதற்கு அவ்வதிர்ச்சிகளே சான்ருகும். நிலவு பல அடுக்குகளைக் கொண்டது. மேற்படிவு பதினைந்து கி. மீ. கனமுள்ளது. அதனடியில் உருகிய பாறைக் குழம்பு உள்ளது.

### 8. நிலாக் கற்களை ஆராய்ந்தபோது வெளிப்பட்ட உண்மைகள் யாவை?

ஆராய்ச்சியாளர்கள் நிலாக் கற்களை ஆராய்ந்து அவை எரிமலைக் கற்கள் என்று கூறினர். சிலவகைக் கரும் பழுப்பு நிறக் கற்களில் ‘ இலியம் ’ போன்ற கனிப் பொருள்கள் இருப்பதாகக் கூறுகின்றனர். நிலாக் கற்கள் இருந்த பெட்டியைத் திறந்தபோது வெளியான வாயுகள் சூரியப் புயலில் அடங்கியுள்ள ஆர்கான், இரியான் போன்றவை என்று கூறுகிருர்கள். இவற்றிலிருந்து பூமியும், சந்திரனும் சூரியனிடமிருந்து ஒரே சமயத்தில் விடுபட்ட நெருப்புக் கோளங்களே என்று தெரியவருவதாகக் கூறுகிருர்கள். காற்று, மழை, நீர் முதலியவற்ருல் பூமி குளிர்ந்து உயிர்வாழ ஏற்றதாய் அமைந்துவிட்டது என்றும், நிலவு அப்படி இன்னும் மாறவில்லை என்றும் கருத இடமிருப்பதாகக் கூறுகிருர்கள்.



# மாதிரி வினாத்தாள்

காலம்: $2\frac{1}{2}$ மணி] [மதிப்பெண்கள்: 100

குறிப்பு: (1) கையெழுத்து மிகத் தெளிவாக இருத்தல் வேண்டும்.

(2) விடைகள் சொந்த நடையில் சுருக்கமாகவும் குறித்த அளவினதாகவும் இருத்தல் வேண்டும்.

(3) ஐந்தாம் வினாவுக்கு மட்டும் செய்யுள் நடையிலேயே விடை தரவேண்டும்.

I. இளையான்குடி மாறநாயனார், திருவடியாராக வந்த சிவபெருமானுக்குத் திருவமுது படைத்த நிகழ்ச்சியை விவரி. (20 வரிகள்)

(அல்லது)

காயசண்டிகை சாபம் பெற்ற வரலாற்றைத் தொகுத்து எழுதுக. (20 வரிகள்) 10

II. பின்வருவனவற்றுள் எவையேனும் ஆறு வினாக்கட்கு விடை தருக. (பத்து வரிகள்) $6 \times 5 = 30$

(1) விருந்தோம்பல் குறித்துத் திருவள்ளுவர் கூறுவன யாவை?

(2) நாடறிந்த செல்வர் இயல்பு குறித்துப் பழமொழி கூறுவன யாவை?

(3) அறிஞர் கண்ட நெறிகளாக இன்னிலை இயம்புவன யாவை?

(4) பாண்டிய மன்னன் எவ்வாறு உண்மையை உணர்ந்தான்?

(5) விசுவாமித்திரர் தசரதனை எங்ஙனம் பாராட்டினர் ?

(6) தான் கன்னனை ஈன்ற தாயே என்பதைக் குந்திதேவி எங்ஙனம் புலப்படுத்தினள் ?

(7) போர்க்குறிக் காயத்தின் சிறப்பினைச் சீவகவழுதி எங்ஙனம் எடுத்துரைத்தான் ?

(8) நரையின்மைக்குக் காரணமாகப் பிசிராந்தையார் கூறுவன யாவை ?

III. கீழ்க்காணும் உவமைகளுள் எவையேனும் இரண்டினைப் பொருளுடன் பொருத்திக் காட்டுக. $2 \times 2 = 4$

(1) " புலி சேர்ந்து போகிய கல்லளை."

(2) " அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்."

(3) " பாசப் பழிமுதல் பறிப்பார்."

IV. பின்வருவனவற்றுள் எவையேனும் இரண்டனுக்கு இடஞ் சுட்டிப் பொருள் விளக்கம் தருக. $2 \times 3 = 6$

(1) " யாமுடைச் சிலம்பு முத்துடையரியே."

(2) "காரணமின்றியும் கடுநோய் உழந்தனை."

(3) " போதும் வைகிற்று ; போமிடம் வேறிலை."

(4) " படையூற்ற மிலன் ; சிறியனிவன்."

V. (1) "பெருகு வானம்" எனத் தொடங்கும் கம்பராமாயணச் செய்யுளை அடி பிறழாமல் எழுதுக. 4

(2) 'பிற', 'விடும்', 'படும்' என முடியும் குறட்பாக்களை அடி பிறழாமல் எழுதுக. 6

VI. 'உடலோம்பும் உணவு நெறிகள்' என்பது பற்றி இருபது வரிகள் எழுதுக. 10

அல்லது

சங்கரதாச சுவாமிகளின் வரலாற்றைத் தொகுத்து இருபது வரிகளில் எழுதுக.

VII. பின்வருவனவற்றுள் எவையேனும் ஆறு வினாக்கட்கு விடை தருக. $6 \times 5 = 30$

(1) காந்தி அடிகள் காண விரும்பிய இந்தியா எத்தகையது? இன்றைய இந்தியாவின் நிலை என்ன?

(2) 'இந்தியா ஓர் ஓவியக் கூடமாகும்'— எவ்வாறு?

(3) 'வையை என்னும் பொய்யாக் குலக் கொடி' செல்லும் விதத்தை இளங் கோவடிகள் எவ்வாறு குறிப்பிடுகிருர்?

(4) முதன் முதல் தமிழ் மக்கள் உழவைத் தொடங்கியது எங்ஙனம்?

(5) வெஸ்லியின் நற்ருெண்டால் விளைந்த நன்மைகள் யாவை?

(6) கறையானும் எறும்பும் மனிதனைவிட எவ்வகையில் உயர்ந்தவை?

(7) நள்ளியின் ஈகைத் திறம் எவற்ருல் விளங்குகிறது?

(8) விண்வெளி வீரர்கள் அம்புலியில் செய்த செயல்கள் யாவை?

## விரைவில் வெளிவருகிறது !

இந்நூலாசிரியரைக் கொண்டு எழுதிய 9ஆம் வகுப்பிற்குரிய "தங்கத் தமிழ் வினாவிடை" என்ற நூலும் விரைவில் வெளிவர இருக்கிறது.

ஆசிரியப் பெருமக்களும், மாணவ மணிகளும் வரவேற்று ஆதரவளிக்க அன்புடன் வேண்டுகின்றோம்.

நக்கீரன் பதிப்பகத்தார்.




அச்சிட்டோர் : மத்திய கூட்டுறவு அச்சகம்
1/17, மவுண்ட் ரோடு, சென்னை-2

